புரட்டாசிமூ 12௨ மஹாலயபக்ஷ ஆரம்பம்; 25௨ ஸர்வமஹாலய அமாவாசை; 26௨ நவராத்ரி ஆரம்பம்



*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is; but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith.'*

*'Seek Truth wherever you can find it." But,*

*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—SPEAK THE TRUTH

HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




பேபவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்] [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**

தகம். 20.] 1912ஸு அக்டோபர்மீ, பரீதாபிஸு அற்பிசிமீ [சஞ்சிகை. 7.

## NOTICE.

The Editor of the *Vivekachintamani* while thanking his contributors for their valuable contributions, would like to draw the attention of the public to the fact that in pursuance of the uniform policy of this journal, articles could be received only on the understanding that the entire copy right in the articles should be vested solely in the Editor . would not have become necessary to mention this matter ow but for the fact that literary pilfering is becoming ore and more prevalent in the journalistic world; and intentions of the contributors who have by their free t of the manuscripts helped to further the objects of the iffusion of Knowledge Agency which the Editor has been aintaining and working for the public good under great fficulties and trials for the past twenty-five years, are ing sought to be frustrated by unscrupulous persons.

. V. Swaminathaiyar,
Editor, & Founder V. C.
S. Subrahm...em,
Joint Hon. Secretary,
Vivekachintamani Rev: Committee.

Lalita Publishing Co.,
Sole Agents and Managers
19, Adam St. Mylapore.

"To sell the mind for money is a greater sin than to sell the body."

1. அறிவைப்பரவச்செய்வதற்கான நம் விவேகசிந்தாமணிக்கு வியாச, விஷய தானம் செய்வோர் யாவரேயாயினும் உண்மையான அந்தர்த்தியானத்தோடு பூர்ணமதஸம்மதமாய் விஷயார்ப்பணஞ் செய்யல் வேண்டும். தானம் செய்தபின் தத்தாபஹாரம் செய்யக்கூடாது. தத்தாபஹாரசிந்தையினர்க்கு விவேகசிந்தாமணி சங்கப்பலகைபோலிடங்கொடாதொடுக்கும்.

2. உழைக்கும்வழி யுணராது பிழைக்கவழி தேடும் சில தப்பிலிகள் நம்மை மோசஞ்செய்யாதபடி விவேகசிந்தாமணியிலுள்ள சுதந்திரமெல்லாமெமக்கேஉரிமையாமென்று சட்டப்படி ஆதிமுதற்கொண்டே ஸர்க்கார் கெஜட்டில் தாக்கல் செய்யப்பெற்றிருக்கிறது

3. விவேகசிந்தாமணியில்வரும் விஷயங்களையாவது அவைசம்பந்தமான ஸாதன ஸம்பம விவேகவிளக்கப் பேர்களையாவது தர்மவிரோதமாயுபயோகித்துக் கர்மவிக்னம் செய்வோர் பிழைக்கவழிதெரியாப் புல்லியர் புகும் பாழ்நரகிற்புக்கார் கதியாவர்: அடா அது செய்தவர் பாடஅது படுவர்: இகபர மிரண்டிலுமிது ஸத்தியம் ஸத்தியம், பலிக்குமென்றே நிஜன், பழனியாண்டவன். வேறுமயிலூர்தனே. ஆண்டானடிமையாய் உழைக்க உடன்பட்டான் கைச்சாற்றிது




## The Undedicated Life and the Undiciplined Mind lead one to evil.

"பலதான மில்லாத வூர்பாழ்"—
"நிதானமில்லாத மனசு நாசகாரணம்."

———:(o):———

"பலதானம்" என்றால் என்ன? பலனைக் கொடுக்கிறது என்று அர்த்தம். எதன் பலனைக் கொடுக்கிறது? உண்மையாகப் பார்க்கில் கர்மபலனைக் கொடுப்பதென்றே யேற்படும். காசுபணம், பண்டம்பாடி, பசு அடிமை முதலான உடைமைகளெல்லாம் உள்ளபடி பார்க்கில் கர்மத்தின் பலனாக வந்தவையேயன்றி வேறல்ல. ஆகையால் கைப்பொருளைக் கொடுத்தாலும் மெய்ப்பொருளைக் கொடுத்தாலும் உண்மையில் உள்ளபடி கொடுப்பது கர்மபலனே யாகும். தானம் என்றால் என்ன? தனது என்று உரிமை பாராட்டினதை தனதல்ல உனதேயென்று உறுதி கூறிக்கொடுப்பது தானம். தன்னுரிமையை விட்டுக் கொடுத்தாலும் அதற்கு இகத்திலாவிடில் பரத்திலாயினும் பிரதிபலன் கிடைக்கும் என்கிற காமியசிந்தையை ஊட்கொண்டு கொடுப்பது தானம். பிரதிபலனை நாடாது நிஷ்காமியமாகக் கொடுப்பது தியாகம். இது முக்கியமாய் தன்னை (உடையானையே) கொடுப்பதாகும். அஹப்பற்றறக் கொடுப்பது தியாகம். அஹப்பற்றிருக்கக் கொடுப்பது தானம். தானம் திருப்தியார்த்தம் செய்யும் கர்மம். தியாகம் முக்தியார்த்தம் செய்யும் கர்மம்.

ஸ்வதா வென்னும் சப்தத்தை யுச்சரித்துக் கொடுப்பது தானம். இது திருப்தியார்த்தமாதலால் தர்ப்பணம் என்று பேர்பெறும். தர்ப்பணத்தில் "ஸ்வதா நமஸ்தர்ப்பயாமி" யென்று வருவது தியாகத்தில் ஸ்வாஹா! என்னும் சப்தத்தை யனுசந்தித்து "இன்னாரின் பொருட்டு ஸ்வாஹா! இன்னாருக்கே இது என்னுடையதல்ல (—ந இதந்நமம)" என்று வரும். இதற்கு ஹோமம் என்றுபேர். "ஸ்வாஹா" என்பது அக்னிதேவனின் சக்தி ஸ்வரூபம். அக்னிசக்தியினாலேதான் சராசரங்களெல்லாம் தோன்றி மறைந்து இயங்குகின்றன. மேற்றிசையார் நவீனமாய்க் கண்டுபிடிக்கும் அதிசயங்களெல்லாம் இந்த அக்னி சக்தியின் மஹிமையினாலேதான். உதாரணமாக (Aeroplane) என்னும் பறக்கும் யந்திரத்தை யெடுத்துக் கொள்வோம். அதிலே யமைக்கப் பெற்றுள்ள "மோடார்" இயக்கும் சக்திவாய்ந்த யந்திரம் அக்னி சக்தி னாலன்றி வேறு எதனால் இயங்குகின்றது ம் அக்னிசக்தி யந்திரத்தை இயக்க, யந்திரம் வா வை இயக்க சிருஷ்டிப் பொருள்களிலெல்லா பலவானாகிய வாயு பறக்கும் யந்திரத்தை பூ யின் ஆகர்ஷணைசக்தியை யெதிர்த்து விலக்கி கொண்டு மேலேயெழச் செய்கிறான்.

வாயுபுத்திரன் என்று ஹனுமாருக்குப்பேர். இந்த ஹனுமார் (மனக்குரங்கு) வாயுவுக்கு அஞ்சனை வயிற்றில் பிறந்த குமாரன். வாயு—இயக்கும் சக்தி; புருஷன் (Spirit). அஞ்சனை—இயக்கப்படும் ஜடவஸ்து (பிரகிருதி–Matter). புருஷன் பிரகிருதி ஆகிய இரண்டும் சேர்ந்தால் மனோசக்தி யென்கிற சூக்ஷ்மபுத்திரன் பிறக்கிறான். இந்த ஹனுமார் வாயுபுத்திரனானதால் எல்லாவித்தையிலும் தேர்ந்தவர். ஆதலால் இவருக்கு நவவியாகரண பண்டிதர் என்றுபேர். அஞ்சனை புத்திரனானதலால் ஆஞ்சநேயர். இந்த ஆஞ்சநேயரை உபாஸிப்பவர் எல்லா சக்திகளையும் பெறுவர். இவர் உண்மையான இராமபக்தர்.

ரம் † என்பது அக்னிபீஜம். மம் ‡ என்பது மாயாபீஜம் (மௌனமந்திரம்). ராமம்என்

† cf. "ராமேஸ்வரரமணீய முகாம்புஜ
ஸோமேஸ்வரஸம்க்ருதி சிவா"
—பீஜாக்ஷரவர்ணமாலிகா.

‡ cf. "மந்மதநாசநமதுபாகப்ரிய
மந்தரபர்வதவாஸசிவா"—பீஜாக்ஷரவர்ண மாலிகா.

பது சிவசக்தி யிரண்டும் எகீபாவமாகச் சேர்ந்துள்ள ஆனந்த ஸ்வரூபம். இந்த ஆனந்தத்திற்கு அஞ்ஞானம் உபாதி. ஞானம் அதிஷ்டான தேவதை. அஞ்ஞானம் மாயை; ஞானம் சீதை. ஸ்வர்ணமான் ரூபமாய்வந்த மாயை மயக்கில் சிக்குண்டபோது பாசரூபமான வாசுகி யம்சமாகிய ராவணன் வந்து சீதையைக் கட்டிக்கொண்டு போய்விட்டான்.

பதி-பசு-பாசம் என்னும் மூன்றில் பதியணுகில் பசுபாச மிரண்டும் பறந்துபோம். பதிவிலகில் பசு-பாச மிரண்டும் வந்து பற்றும்.

பதிரூபம்—இராமன்.

பசுரூபம்—ஸ்வர்ணமானின்மேல் இச்சை வைத்த சீதை (மாயை மயக்கில் அகப்பட்ட ஞானம்.)

பாசரூபம்—(வாசுகி யம்சமான பந்தகாரணமாம்) இராவணன்.

ஞானம் மாயைமயக்கில் விழ (ஸ்வர்ணமானை யிச்சிக்க) பதிவிலகிப் போய்விட்டார். அப்பொழுது மாயையினால் மயக்கப்பட்ட ஞானமாகிய அஞ்ஞான வடிவாம் (இராமனை விட்டுப்பிரிந்த) சீதையை பாசரூபமாகிய இராவணன் வந்து பற்றிக்கொண்டு போய்விட்டான்.

இராமன் (பதி) நிருபாதிகனாக, ஞானசக்தி பிரிந்து போனதை ஆற்றாமல் * சக்தியைத் தேடி யலையலானான். ஞானசக்தியிழந்த காரணத்தால் அவன் அசக்தனாக, ஹனுமார் (உபாதிஸஹிதமான சக்திஸ்வரூபம்) மனோசக்தி ஸ்வரூபமாதலால் அவர் சீதையைத் தேடிப்பிடித்துச் சிறைமீட்கச் சகாயமாயினார். மாயை மயக்கினாலிழந்த ஆத்மசக்தியை மனோசக்தியின் முயற்சியினாலும் சகாயத்தினாலுமே கண்டுபிடித்து மீட்டும் அடையலாம்.

* ஆற்றல் (சக்தி) எல்லாம் சக்தி ஸம்யுக்தனாயுள்ள கடவுளுக்கேயன்றி சக்தியைவிட்டு விலகினவனுக்கில்லை.

"Our religion is the purification of the Human mind."

சமய சிக்ஷையெல்லாம் ஹிருதய சுத்தியின் பொருட்டே. ஹிருதய சுத்தி வாய்ந்தால் சிற்றம்பலதரிசனமாகும். சிற்றம்பலம்=தஹராகாசம். இந்த திருச்சிற்றம்பலத்திலே ஆதிநாதனுடைய நிருத்த விசேஷத்தால் தோன்றும் இயக்கமே வாயுசக்தி. இது பலமாத்ரமாய் பலமேஸ்வரூபமாய் உள்ளது. இந்த பலம் அஞ்சனா சம்பந்தத்தால் (பிரகிருதியின் சேர்க்கையால்) பரிணாம தர்மமாகிறது. (Becomes the Law of Evolution.) இந்த பரிணாம தர்மசக்தியே (Creative Evolution of Bergson) உயிர்நிலை (Law of Life) ஆகிறது. இந்த உயிர்நிலைதானே (Law of Life) ஹனுமாரும் ஆஞ்சநேயருமாம். இவருடைய பூரணஸ்வரூபம் "பஞ்சமுகி" யென்பர். அதாவது ஐந்து முகங்களையுடைய ஹனுமார். இவர்தான் மயில்ராவணனை வென்றவர். மாயாசக்தியை வெல்ல மனோசக்தியைத்தவிர வேறில்லை. "குலத்தைக் கெடுத்தது கோடரிக்காம்பு" அதுபோல "மாயையைக் கெடுப்பது மனோசக்தி" மனோசக்தி சித்தவிருத்தி யொடுங்கினவிடத்திலேயன்றி வரிந்தவிடத்தில் இல்லை. ஆகையால் சித்தவிருத்தி நிரோதனத்தினாலேயே மனோசக்தி விருத்தியாம். மனோசக்தி யென்றாலும் யோகசக்தியென்றாலும் ஒன்றே. இந்த யோகசக்தி வாய்ந்தவன் யாரோ அவனே ஹனுமார். உபாஸனைக்கு அதிகாரியாவான். அஃதில்லார் அல்லல்பட்டு அவதிப்படுவார்.

ஆத்மசக்தி உதயமாகுங்கால் (சூரியன் முன் சந்திரன்போல்) மனோசக்தி யொடுங்கிவிடும். எப்படியெனில் அனுபவத்தில் கண்டுகொள்க. அல்லது ஸ்ரீராமபிரான் சந்நி

"Unity is the Law of God. Number is the Law of the Universe. cf. Evolution is the Law of Life."
—*Epicteturs.*

தானத்தில் தூக்கினவாலைத் தொங்கவிட்டுக் காலில் சுற்றிக்கொண்டு கூப்பினகையும் குவிந்தமனமுமாக நிற்கும் ஆஞ்சநேயரைப் பணிந்து கேட்கும் முறையறிந்து கேளுங்கள்; சொல்லும்முறையால் அவர் சொல்லுவார். யோகமார்க்கத்தில் யோகதர்சநங் கண்டவர்களுக்கு "ஒழிவிலொடுக்க" நிலையில் எல்லாம் தெரியும். வித்து நிலத்தில் வீழ்ந்தால், அது மக்கி மடிந்தபின்தான் முளைத்துத் துளிர்த்துத் தழைத்து வளர்ந்து பலனைத்தரும். இது ஸ்தூல சூக்ஷ்ம மிரண்டிற்கும் பொருந்தும்.

நாடிசுத்தியில்லாமகளிர் கருப்பாதானம் வாங்கிக்கொண்டால் ஆறுவது மாதம் ஆத்மசக்தி பிண்டத்தில் உதிக்குமுன் முதலைந்து மாதத்திலும் பஞ்சபூத சுத்தி தானேயுண்டாகும். கருப்பாதான சடங்கு காலத்தில் சூக்ஷ்மமாய் மந்திரசக்தியினால் பூதசுத்தி செய்தது, கருப்பாதானம் உள்ளபடி பலித்தபோது ஸ்தூலமாய்ப் பலிக்கும். கருப்பிணி பிடித்தவர்கள் முதலைந்துமாதம் வரையில் "மசக்கை"யென்று படும்பாடெல்லாம் நிலத்தில் விழுந்த வித்து மக்கிமடிந்து உயிர்த்தெழுவதுபோல், ஜநந க்ஷேத்திரத்தில் விழுந்த வித்து மக்கிமடிந்து உயிர்பெற்றெழுவதற்கான உத்பாதங்களேயன்றி வேறில்லை. சில பெண்களுக்கு அந்த ஆகாரம் செல்லாமல் 'காயசோஷணம்' உண்டாகி (உடம்பு வற்றியுலர்ந்து) பின்னர் பட்டமரம் பாலொழுகத் துளிர்த்தாற்போல, வற்றியுலர்ந்த சரீரம் பசையொட்டிப் பச்சென்று பச்சை நரம்போடத்தழைக்கும். இதை அனுபவத்தில் பரக்கக்காணலாம். விசேஷமாய் பிரதம கருப்பத்தில் இதை நன்றாய்க்காணலாம். பூதசுத்தியில்லாத தேஹத்தில் ஆத்மசக்தி ஜநிக்காது. மனோசுத்தி யில்லாதவரையில் பூதசுத்தி நிலைத்திருக்கமாட்டாது. வரட்டுப்பசுவும் மலட்டுஸ்திரீயும் மழையில்லாதுவரண்ட ஆகாயமும் தேவதைகளின் சாபபலன் (தெய்வ குற்றம்) என்பர். உலகத்தில் ஆக்கிரமம் அதிகரித்தகாலையில் வானம் வரண்டுபோமென்பர். இது ஸத்தியம். ஏனெனில் மனோசக்தியின்றி ஜடசக்தியில்லையாதலால், அதர்மம் மலிந்துவிட்டது மனோசக்தியும் அதற்குக் காரணமான ஆத்ம சக்தியும் குறைந்து ஸம்ஹார சக்தியான ஜடசக்தியே மிகுந்திருக்கும். தேஹம் என்றாலே தஹிக்கப் பெறுவது என்று அர்த்தம். தேஹமே சம்ஹார சக்தியாம். "ஊனை வளர்த்தார் உயிர் வளர்த்தாரே" என்னும் திருமந்திரம் பொய்க்க உயிரை வதைத்து ஊனை வளர்க்கிறவர்கள் "உயிர்வதைத்தார் ஊன்வதைத்தாரே" யென்று சொல்கிற தர்மத்துக்கிலக்காக ஊரையழித்துக் கொழித்தனொடு தானும் அழிவர். கருப்பந்தரித்த அபலைகளை உயிர் பதைக்க அக்கிரமஞ் செய்யும்படியான அதர்மம் மலிந்தால், தர்மம் தலையெடுக்குங்காலம் கிட்டியதென்றே சொல்லலாம். "அரசன் அன்று கொல்லும் தெய்வம் நின்று கொல்லும்" என்பது பழமொழி. அப்போதப்போது நடக்கும் அக்கிரமங்களை அடக்காமல் வளரவிட்டால், அதர்மம் மிகுந்து தலைவிரிகோலமாய் ஆடும். பிசாசு ஆட்டத்தொடங்கினால் அதை யோட்டும் பூசாரியும் தானே வருவான். "அர்ச்சுனா! அதர்மம் தலையெடுக்கும் போதெல்லாம், தர்மஸ்தாபனத்தின் பொருட்டு நான் அவதாரமாகிறேன்" என்று பகவான் கொடுத்த அபயவாக்கு ஒருக்காலும் பொய்க்காது. ஏனெனில் அது ஸநாதனமான ஒரு தர்மத்தை (an Eternal Law) யெடுத்துப் போதித்ததன்றி வேறல்ல. ஆகவே "பலதானமில்லாதவூர்பாழ்" என்பதற்கு அர்த்தமென்னவெனில் "கர்மபலனை ஈசுவரார்ப்பணமாகக்கொடுத்துழைக்காதவர் இருக்கும் ஊர் (த்ரிபுரம்) பாழாகும்—அதாவது ஜந்மசாபல்யமிழந்து வியர்த்தமாகும். அப்படியே "நிதானமில்லாத மநஸ—நாசகாரணம்" என்பதும் உண்மை. நிதானம் என்றால் நித்யாநித்யவஸ்து விவேகத்தோடு கூடிய தர்மாதர்ம வுணர்ச்சி விசேஷத்தால் சமரஸப்பட்ட நடுவுநிலை. இந்த நடுவுநிலை (Balance

of Mind) யில்லாத மநஸை தர்மாதர்மவியவஸ்தையின்றி தொண்டிமாடுபோல் கண்டபடியெல்லாமோடுமாதலால் அது நாசகாரணமாம் என்பது ஸத்யம். "அஹம்பாவத்தாலே யழிந்தான் துரியோதனன்" என்பது பழமொழி. "பல தானமில்லாதவூர் பாழ்" என்கிற மூதோர் வாக்கைச் சொல்லிக்கொண்டு லஞ்சப்பிரதானத்தின் தொடர்ச்சியாய்வரும் அக்கிரமங்களை அதர்மமென்றுணராமல் தர்ம்மவழிப்பட்டதாகக் காட்டும் சமர்த்தர்கள் நிதானம் தப்பி நடுவு நிலைகெட்டுப் போவார்கள். நடுவு நிலைதப்பினால், உயரவிருப்பவன் (64 ஆடிக்கம்பமேறி வித்தையாடுபவன்) நிதானம் தப்பினால் எப்படியோ அப்படித்தான் ஆவார்கள். அவர்களுக்கு ஆகாயகமனசக்தி யுண்டாகமாட்டாது.

## Sri Sankara A—Sketch.

### ஸ்ரீ சங்கரர்.

(Special for the Vivekachintamani.)

### நான்காம் அத்தியாயம்.

ஸ்ரீ சங்கரர் காசி க்ஷேத்திரத்தில் அத்துவித மார்க்கத்தை விருத்தி செய்துகொண்டு வருகையில், இவர் கனவில் விந்துமாதவர் தோன்றி நாளைக்காலையில் உன்னிடம் ஒருமாணக்கர் வருவார், அவரை ஏற்றுக்கொள்ளுக என்றனர். அப்படியே மறுநாள் தனது மாணக்கர்களுடன் சங்கரர் கங்கையில் நீராடிக் கரையிலிட்கார்ந்து ஜபஞ் செய்துக்கொண்டிருக்கையில், தென்னாட்டிற் பிறந்த சநந்தனர் என்னும் பக்தரொருவர் சத்குருவை நாடி வடக்கு நோக்கி யாத்திரைசெய்து வியாசகாசியை யடைந்து, சிவகாசி கங்கைக்கரையில் சங்கரருடைய திவ்விய தேகத்தில் ஸ்ரீ விஸ்வநாதருடைய அம்சையைக்கண்டு ஆகந்தங்கொண்டு, அங்கிருந்தபடியே பணிந்து எழுந்து, உடனே சிவகாசியை யடைந்து சங்கரரை வணங்கி சேவைசெய்து வந்தனர்.

2. ஸ்ரீ சங்கரர் அம்மைந்தனைச் சோதித்து முறையே சந்நியாசத்தை ஈந்து மாணக்கராக்கிக்கொள்ளவே, சிறிது காலத்துள் இவர் மாணக்கர்களில் சிறந்தவரா யிருந்ததன்றி, இவரிடத்தில் விஷ்ணுமூர்த்தியின் கலைகளும் விளங்கின.

3 ஸ்ரீசங்கரர் காசியில் ஒன்பது மாதகாலமிருந்தபடியால் இவருடைய சாமர்த்தியத்தாலும் மாணக்கர்கள் பிரசங்கத்தாலும் அனேகமாயிரம்பேர் துவிதபாவனையுள்ளவர்கள் அத்வைதிகளானார்கள். தருக்கர், மீமாம்சகர், சாங்கியர் முதலியோர்களுடைய செருக்கு ஒழிந்து வந்தது.

4. ஸ்ரீ சங்கரர், தமக்கு கோவிந்த யோகியார் அருளியிருந்த ஸ்ரீ கைலாய சந்திரமௌளீசுவர லிங்கம், இரத்னகருப்ப கணபதி, ஸ்ரீ சக்கரம், நவக்கிரக யந்திரம், நரசிங்க சாளிக்கிராமம், இவைகளை சநந்தனரிடம் கொடுத்து பூஜித்து வரும்படி யாக்கியாபித்தனர்.

5. சநந்தனர் அத்தேவதா பூஜையைக் கிரமப்படி செய்து வந்ததன்றி பஞ்சாயதனபூஜை மார்க்கத்தை யாவருக்கும் உபதேசித்து, எத்தேவதையிடத்தில் யாருக்கு பக்தியோ அத்தெய்வமூலமாய் அவர்கள் எண்ணம் பலிக்கும்படிசெய்து மாந்தரைத் தம்வசமாக்கி வந்தனர்.

6. ஒருநாள் ஸ்ரீ சங்கரர் தம்மாணக்கரோடு கங்கையில் ஸ்நானஞ்செய்து நித்திய கர்மாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு தமது மடத்திற்குத் திரும்பி வருகையில் சூத்திரவடிவமுடைய ஓர் சண்டாளன் தன் தலையின்மேல் கட்குடந்தாங்கி நான்கு நாய்கள் தன்னைத் தொடர்ந்துவர ஸ்ரீ சங்கரர் அருகே வந்தனன்.

7. அவனை இவர்கண்டு 'எட்டிப்போ'வென்ற அர்த்தங் கொடுக்கக்கூடிய சைகை செய்தனர். அதுகண்ட அவன் இவருக்கு வழிவிடாது நகைத்து 'சந்நியாசித்தலைவ! எக்காரணத்தினால், யாரை எங்கு போகச்சொன்னாய்? அன்

னமயமாகிய தேகத்தைத்தாங்கி அதையே எட்டிப்போகச் சொன்னாயோ? பெருங்கடல்போலும் ஆன்மா எங்கும் நிறைந்திருக்க, அதனுள் அந்தணன், சந்நியாசி, சண்டாளன் என்னும் வேறுபாடேன்? ஆன்மா வேறு என்பாயாகில், மட்குடத்திலும், பொற்குடத்திலும் நிறைந்துள்ள ஆகாயத்திற்கும் வேறுபாடுகூற வல்லமையுண்டோ உனக்கு? கங்கையின் நீரில்காணும் சூரிய பிம்பத்திற்கும் சாக்கடை நீரில்காணும் சூரிய பிம்பத்திற்கும் வேறுபாடென்ன? சுஷுப்தியில் நினைவும் கனவுமாகிய பிரபஞ்சமுளதோ? பழுதையை பாம்பென மருண்டவன், பழுதையென வறிந்தபின்னும் அச்சமுற்றோடக் காரணமுண்டோ? நீ உண்மையான அத்வைதக்கருத்தினை யுணர்ந்தவனேயாயின் இவ்வேற்றுமை உன்னைவிட்டொழியாதிருக்குமோ? ஞானியென்று சந்நியாச வேஷம்பூண்டு துவித பாவனையை விருத்திசெய்து உலகத்தை வஞ்சித்தல் தகுமோ'? என்றனன்.

8. ஸ்ரீ சங்கரர் அத்வைத ஆநந்தம்பொங்க, "எறும்புமுதல் பிரமனீறாகவுள்ள எல்லாவுடம்பினிடத்தும் நிரம்பிய அறிவாம் பொருளொன்றே உண்மையாயுள்ளது என்னும் இரகசியத்தை எவன் குருமூலமாயுணர்ந்து அனுபவத்திலும் அறிந்தவனோ அப்பெரியவன் சண்டாளனேயாயினும், அவன் எனக்கு குருவென்பதே என் கருத்து" எனவிளக்கும் "மானிஷா பஞ்சகம்" என்னும் ஸ்லோகங்களைக் கூறினார்.

9. உடனே சண்டாளவடிவு மறைந்து ரிஷபவாகனாரூடராய் விஸ்வநாதர் தரிசனம் தந்தருளினார். கட்குடம் கங்கையாகவும் நாய்கள் வேதங்களாகவும் தோன்றின. இத்திருக்கோலத்தைக்கண்ட ஸ்ரீ சங்கரர் கண்களில் ஆநந்தக் கண்ணீர் பெருக 'சிவோகம்' "சிவஎவநாகியத்" என்னும் வேதாந்த சாரமாயுள்ள ஸ்தோத்திரங்களினாலும் ஸ்துதிசெய்தனர்.

10. ஸ்ரீவிஸ்வநாதர் அபயாஸ்தங்கொடுத்து வேதமுடிவை யுபதேசித்து, நாமே நீயாக விருக்கின்றாய் எனக்கூறி, வாதியர்களை வென்று, மோக்ஷ இச்சையுள்ளவர்களுக்கு ஞானமார்க்கத்தை யுபதேசித்து மாணாக்கர் பரம்பரையால் உலக ஜனங்களுய்யுமாறு செய்து, எம்மையடைகவென்று கூறி மறைந்தனர்.

11. சிவனருட் திருமேனிப்பரிசத்தால் ஸ்ரீ சங்கரர் ப்ரஹ்மஞானமயராய் விளங்கினார். உடனே மாணாக்கர்களுடன் ஸ்ரீ சங்கரர் ஸ்ரீ விஸ்வநாதர் சன்னிதியை யடைந்து துதித்து நிற்கையில் "சத்தியமத்துவைதம்" என்னும் வாக்கியம் அனைவரும் கேட்க இலிங்கத்திடத்திலிருந்து உண்டாயது.

12. 'ஜெகதாசாரிய தினசரியை' என்னும் கிரந்தத்துள் இந்நாளில் நடந்த சரிதைக்கு 'ஆநந்த பூமிகை' என்று பெயர்.

13. பின்பு ஸ்ரீ சங்கரர் காசியினின்றும் மாணாக்கர்களுடன் புறப்பட்டு ஹிமாசலத்தை யடைந்து, பத்ரிகாஸ்ரமம் சேர்ந்து, அங்கு யோகத்திருந்த பெரியவர்களை தரிசித்து, வேதவியாசரைத் தரிசிக்கும்பொருட்டு, அங்கு காணப்படும் வனத்துட்சென்று பார்த்தும் காணாது, நாராயணாஸ்ரமம் சேர்ந்து அவரை வணங்கி 'ஐய! பிர்ம சூத்திரத்தினை வியாசர் கருத்தோடு பாஷியஞ்செய்து யாவருக்கும்' பயன்படும்படி வெளிப்படுத்த எண்ணினேன், என்று கூறினார். அதுகேட்ட நாராயண முனிவர் ஸ்ரீ சங்கரரைத் தழுவிக்கொண்டு, துருவாசர், வியாசர், நீ, நான் என்னும் நால்வரும் வேறானவரன்று. இப்பொழுது வியாசர் தமது உட்கருத்து தம்மால் வெளிவந்தவாறாகாதபடி நின்னால் வெளிப்பட்டபின், அதனால் தங்கருத்தினை வெளிப்படுத்தவெண்ணி, உமக்கு வெளிப்படாது மறைந்திருக்கின்றனர். சிவனறிவுக்கு விஷ்ணுவும், விஷ்ணுவின் அறிவிற்குச் சிவனும் சாக்ஷியாக விருப்பதால், நீர் செய்கிற பாஷ்யமே

வியாசர் கருத்தாகவிருக்கும். இவற்றை நீர் அறிந்தவரே யாயினும். மானிட தர்மப்படி வினவுகின்றீர். நல்லது, இதனை நீரன்றி முடிப்பவரில்லை'' என்று கூறி, தமது தவத்தின் வலிமையையுங் கொடுத் தனுப்பினர்.

14. பிறகு சங்கரர் பிர்மசூத்திரம், உபநிஷதம், பகவத்கீதை முதலியவைகளுக்கு பாஷியங்களைச் செய்து ஆன்மபோதம், தத்வாலோகம், அபரோக்ஷானுபூதி, அத்துவித சகஸ்த்ரம், உபதேச சகஸ்திரம் முதலிய சிறுநூல்களைச் செய்து மாணாக்கர்களுக்கு போதித்து வந்தனர். பத்ரிகாஸ்ரமத்திலிருந்த பல முனிவர்களும் இவருக்கு மாணாக்கராகி வேதாந்த பாஷியத்தை ஓதிவந்தனர்.

15. சநந்தனர் மாணாக்கர்களுள், குருவருட்கு பாத்திரரா யிருப்பதையறிந்த மற்றவர்கள் அழுக்காறு கொண்டதை சங்கரரறிந்து, அவர்கட்கு புத்தி புகட்டுமாறு கங்கையினக்கரையில் தேவபூஜையின் பொருட்டு மலரெடுத்துக்கொண்டிருந்த சநந்தனரைக் கூவி உடனே வரும்படி அழைத்தனர். அவர் அக்கணமே குருபக்தி வலிமையால் நதியின்பேரில் நடந்து வந்தனர். சநந்தனருடைய குருபக்தியை சிறப்பிக்க பாகிரதி அவர் பாதங்களுக்கு பத்மங்களைக் கொடுத்துதவினன். இவற்றைக்கண்ட மாணாக்கர்களும் தாமெண்ணியது தவறெனவறிந்து அவரிடத்து மிகுந்த பக்தியுடையவராய் 'பத்மபாதர்' என்ற காரணப் பெயரிட்டு மகிழ்ந்திருந்தனர்.

16. பிறகு ஸ்ரீ சங்கரர் பத்மபாதர் முதலிய மாணாக்கர்களோடு காசிக்குத் திரும்பி வருகையில், அரித்துவாரம், பிர்மகபாலம், காளிக்கட்டம், அயோத்தி, பாடலிபுரம், பிரயாகை முதலிய க்ஷேத்திரங்களில் சபைகூட்டி அத்வைதத்தைப் பிரசங்கஞ் செய்ய அகோரர், நகுலேஸ்வரர், சித்தநாதர், உக்கிரனவரவர், ம்ருகேந்திரநாதர், ஒட்டியான சித்தர் முதலிய பலர் பலவிடங்களிலிருந்து வந்து பாசுபதம், கபாலிகம், கணாபதம், சௌரம், வைரவம், குபேரம், காலவாதம் முதலிய மதக்கோட்பாடுகளை யாதாரமாகக்கொண்டு வாதிட, ஸ்ரீ சங்கரர் அவர்கள் ஒவ்வொருவரையும் தோல்வியடைவித்து கர்வத்தை யடக்க, அவர்கள் வணங்கி உபதேசம் பெற்று, தத்தம் மாணாக்கர்களுடன் அத்வைதிகளாய் குருவின் கட்டளைப்படி தங்களிருப்பிடம் சேர்ந்து சங்கர பாஷ்யத்தை ஜனங்களுக்கு விளக்கிப் போதித்து வந்தனர்.

17. பின்னும் ஸ்ரீ சங்கரர் சோமநாதம், துவாரகை, வடமதுரை, கோகுலம் முதலியவிடங்களிலுள்ள விஷ்ணுவர்த்தனர், லச்சநாராயணர் முதலிய விஷ்ணு பாகவதர்களையும், பாஸ்கரபட்டர் முதலிய தேவி பாகவதர்களையும், ஆதித்தியதாசர் முதலிய சூர்ய பாகவதர்களையும், பத்திரநாதர் முதலிய கணபதி பாகவதர்களையும், உக்கிரமூர்த்தி முதலிய பைரவ பாகவதர்களையும் வாதில் வென்று, அத்வைதத்தை அவர்கட்குப்போதித்து, அவர்களனைவரையும் மாணாக்கராக்கிக்கொண்டு, பிரகிருதிப் பிரகாசம், சியாத்துவாத கண்டனம், சத்வபங்கி பஞ்ஜனம் முதலிய பிரகரணங்களையுடைய "யுக்திஸ் லோகஷட்சதி" என்னும் நூலைச் செய்து காசியை யடைந்தார்.

18. அவ்விடத்தில் இருபத்து நாலாயிரம் பேர் பாஷ்யமோத வந்தனர். அவர்கட்கு தமது மாணாக்கர்களைக் கொண்டு ஓதுவித்து, வாதிப்பவர்களை வென்று அத்வைத அமுதத்தினையூட்டி ஆநந்த சந்திர மௌளியாய் யாவராலும் பூஜிக்கப் பெற்றனர்.

19. ஸ்ரீ காசியில் கங்கைக்கரையில் ஸ்ரீ சங்கர பகவத்பாதர் தமது மாணாக்கர்களுக்கு 'சாரீர மீமாம்ஸா பாஷ்யத்தை' ஓதுவித்துக்கொண்டிருக்கையில், மிக்க பிரகாசமான தேகமுடையதோர் விருத்த வேதியர் அங்குவந்து நீயார்? இவர்களுக்கு என்ன கற்பிக்கின்றாய்?

என்று வினவ, பத்மபாதர், இவரே எங்களுக்கு குரு, பிர்மசூத்திரத்திற்கு பாஷ்யத்தை உபதேசிக்கின்றனர், என்றார்.

20. பிறகு வேதியர் சங்கரரைப்பார்த்து, ஐய! பிர்ம சூஸ்திரம் மூன்றும் அத்தியாயம் முதற்பாதம் "ததந்தரப்பிரதிபத்தௌ" என்று தொடங்குகிற சூத்திரத்திற்கு உரை கூறுக வென்றனர்.

21. ஸ்ரீ சங்கரர் பெரியவருக்கு வந்தனஞ்செய்து ஆசனத்திருத்தி 'ஆன்மாவேறு உடம்பினை யடையும்பொழுது சூக்ஷ்ம பூதங்களால் தழுவப்பட்டுப் போகின்றது என்றனர். பிறகு வேதியர் பலவிதமாக வேறுபடுத்தி வினவ, அவற்றிற்கெல்லாம் ஸ்ரீ சங்கரர் ஒவ்வொன்றுக்கும் பத்துவகையாக விடைகூறினர்.

22. இங்ஙனம் எட்டு நாள்வரையில் தர்க்கம் நடந்தது. பத்மபாதர் ஒவ்வொன்றையும் கவனமாய்க் கேட்டுணர்ந்தனர். மற்றவர் இவ்வரிய விஷயங்களை அறிய மாட்டாதவர்களாய் மயங்கி பத்மபாதரை இவ்வேதியர் யார்? என்று கேட்டனர்.

23. பத்மபாதர் கண்களுக்கு தர்க்கஞ்செய்ய வந்தவர் ஹரியாகவும் தமது குரு ஹரனாகவும் தோற்ற, வினவியவர்களுக்கு, வேதியர் நாராயணாம்சமாகிய வேதவியாசர் என்று கூறினர்.

24. பிறகு ஸ்ரீ சங்கரரும் அவ்வேதியரை யறிந்து துதித்து வணங்கவே, அவரும் தமது நிஜவடிவத்தோடு தண்டகமண்டல தாரராய், மான்தோலும் வெண்ணீறும் உருத்திராக்ஷமும் பிரகாசிக்க வெளிப்பட்டு நிற்க, ஸ்ரீ சங்கரர் பத்மபாதரிடமிருந்த தமது பாஷ்யச் சுவடியை வாங்கி, அவர் முன்வைத்து, "ஏ! பிரபோ! தமது பிர்ம சூத்திர பானுவிற்கு எனது பாஷியதீபத்தில் நீராஜனஞ் செய்கின்றேன். வேதங்களைப் பிரித்து விளக்கி பதினெண் புராணங்களையுஞ் செய்து, வேதசாரத்தை ஐந்தாம்வேதமெனக் கூறும்படி மகா பாரதத்தை எழுதி கலைமகள் செல்வமுற்றும் வெளிப்படுத்தியிருக்குந் தேவரீர் சமுகத்தில் நாணமின்றி பாஷியம் செய்த துணிவைப் பொருத்துத் திருத்தியருள வேண்டு'மென்று வேண்டினர்.

25. வியாசர், ஒரு முகூர்த்தம்வரை அச்சங்கர பாஷியத்தைப் பார்த்து தமது மார்பிலணைத்து 'ஐய, சங்கர! நீ அச் சங்கரனேயாவாய், இல்லையேல் என் கருத்தினை இங்ஙனம் வெளிப்படுத்தலாற்றாய்! இதனைப் பார்த்ததினால் எனக்குள்ள ஐயங்களும் ஒழிந்தன. உனது வாயினின்று குற்றமுள்ள வுரை எவ்வாறுண்டாம்? உன்செய்தி கைலாயத்திலுணர்ந்தே இப்பாஷியத்தைப் பார்க்க வந்தேன். நான் பிர்மசூத்திரம் செய்ததற்குப் பயனிப்பொழுது தானுண்டாயிற்று. வெகு ரகசியமாக மறைத்து வைக்கப்பட்டிருந்த தத்துவங்கள் இப்பாஷியத்தால் விளக்கப்பட்டன. நீ நானே! என்கருத்தே நினது. சுகன் எவ்வாறு எனக்குத் தருகின்றானோ அவ்வாறே நீ எனக்கு மகிழ்ச்சியைத் தந்தாய். இயற்கைப் பிரகாசனாகிய உன்னை நான் ஒளிசெய்ய வல்லேனல்லன்" என்று கூறி மறைய வெத்தனித்த பொழுது,

26. ஸ்ரீ சங்கரர் பக்தியோடு அவரைத் துதித்து, ஐய! தேவரீர் ஒரு முகூர்த்தம்வரை கருணையோடு இங்கெழுந்தருளியிருந்தால், தம் சந்நிதியிற்றானே கங்கையில் இவ்வநித்தியமாகிய உடலை விட்டு கவலையற்றவனாயிருப்பேனென்றுகூற,

27. "உன் சங்கதி யானறிவேன். உனக்கு பிறப்பினுல் ஆயுள் எட்டுவருஷம். நீ தேடிப் பெற்றது எட்டுவருஷம். அப்பதினாறும இப்பொழுது தீர்ந்தது. இன்றுமுதல் இன்னும் பதினாறுவருஷம் நீ உலகுவலம்வந்து, இப்பிர்மவித்தையை விளக்கஞ்செய்து, மதவாதியரை வென்று, அதனைத்தனை நிலைநாட்டவேண்டும். சைவ வைஷ்ணவ முதலிய அறுசமய

தருமங்களையும் வகுத்து, ஞானத்திற்குக் கருவியாகிய கர்ம பக்தி யோக மார்க்கங்களைப் பலருக்கு முதவும்படி, பலசிறு நூல்களை இயற்றி இக்குருமரபு கெடாதபடி குருபீடங்களை ஏற்படுத்தி முப்பத்திரண்டு வயதான உடனே கைலைக்கு யாக்கையுடன் சேர்ந்து சிவசொரூபத்திலடைகின்றாய், உனக்கு வியாக்கியான சிம்மாசனாதீஸ்வரன், ஷட்தரிசனஸ்தாபனசாரியன், பூமண்டலாசாரியன், சர்வதந்திர சுதந்திரன் என நான்கு விருதுகளும் யான் கொடுத்தேன். நீயும் உன் மாணாக்கர் பரம்பரையும் உலகை குருவாகவிருக்கக் கடவது!" என்று வாழ்த்தி மறைந்தனர் வேதவியாசர். அப்பொழுது "ததாஸ்து" என்று அசரீரி யுண்டாயிற்று.

28. பிறகு ஸ்ரீசங்கரர் தம் மாணாக்கரோடு பிரயாகையை யடைந்து கங்கை, யமுனை, சரஸ்வதி நதிகளின் சங்கமத்தைத் தரிசித்த, சத்துவ ஞானம்போலும் தென்முகமாகப் பாயும் வெண்ணிற கங்கையும்' தர்ம சகுணத்தைப் போலும், கிழக்குமுகமாக ஓடும் கருநிற யமுனையும், இராஜ சவிச்சை போலும் அரூப விருக்ஷத்தருகில் செம்மை கலந்த பசுநிற சரஸ்வதியும், இட பிங்கலை சுழிமுனை நாடிகளின் கூடலிடம் போல, பிரணவ உபாசனைக்குத் தக்கதாகிய தீர்த்தத்தில் விதிப்படி நீராடி, திரிவேணியை ஸ்துதித்து அவ்விடத்தில் சிறிது இளைப்பாறி யிருந்தனர்.

29. அச்சமயத்தில் குமாரின பட்டபாதர் குரோத பாவத்தை யொழித்து மாணாந்தப் பிராயச்சித்தம் செய்துகொண்டு அக்கிப் பிரவேசஞ் செய்கிறாரென்று கேள்வியுற்ற ஸ்ரீ சங்கரர் அவரிடத்துச் சென்று பூஜிக்கப்பட்டவராய் தாம் செய்த பாஷ்யத்தை பத்மபாதர் மூலமாய் கேட்கச் செய்தனர். பட்டபாதர் இன்பக்கடலிலாழ்ந்து "ஐய! சங்கரரே! யான் இப்பொழுது உம்மை தரிசித்தபின் பாவமேது? பிராயச் சித்தந்தான் என்னத்திற்கு? என்னிடம் நெடுநாளாக மாணாக்கராக விருந்த விஸ்வரூப மண்டன பட்டாசாரியன் என்ற வேதியன் ஆரியவர்த்த புலவரெல்லாம் நன்கு மதிக்க அரசர்க்கெல்லாம் குருவாய் விளங்குகின்றான். அவன் பிர்மாவிற்கு சமமானவன். அவன் அறியாத விஷயமில்லை. அவன் மனைவி உபயபாரதி அவனிலும் சிறந்தவள். அவளே கலைமகளுக்கு நிகரானவள். அவனை வென்று மாணாக்கனாக்கிக் கொண்டால் உலகை வென்றது போலாம். உனது பாஷ்யம் இமயமுதல் சேதுவரையில் நிலைபெறக்கடவது. இறுதிகாலத்தில் விடுவேண்டி வருந்து மெனக்குத் திருவடிதந்து தாரகமுரைத்துக் காத்தல் வேண்டு" மெனக் கூறிய பட்டபாதரை, ஸ்ரீ சங்கரர் அபயகரத்தோடும் உச்சிதொட்டு வலக்காதில் தாரகமந்திரத்தை உபதேசித்து அனுக்கிரகிக்க, அவருடைய ஆத்மா பேரொளியாக மேலெழும்பி அனைவருடைய கண்களையும் கூசும்படி செய்தது. உடனே ஸ்ரீ சங்கரர் பாகிரதியில் நீராடி அப்பாரத்துவாச ஆஸ்சிரமத்தில் தங்கி மாணாக்கர்களுக்கு அறிவுணர்த்திக் கொண்டிருந்தனர்.

T. C. வெங்கடரமணய்யர்.

---

# THE ORPHAN'S CRY.

## The Plaintive Voice that enters the Great Mother-Heart of the Universe.

MOTTO:—"Number is the Law of the Universe."—*Epictetus.*

*The Voice Grace*, or the word of God in response to the Orphan's Cry: தர்மாம்பிகை திருவாக்கு:—(நவராத்திரி முதல்நாள்)

"Do him good in return for evil. No one is under your protection. You and your family are alike under the wing of God. This is an opportunity to test your qualities of Patience and Peacefulness.(சாந்திப்பத்தி க்ஷமாபுத்ரா). It will be a disappointment to ME if you fail to stand the test. There is no such thing as abuse and insult. Borne patiently these things are honours."—*The Voice of God emanating from His Justice of the Peace.*

"ஸத்யம்மாதாபிதாஞ்ஞானம் தர்மோப்ராதா
தயாஸகா: சாந்திப்பத்தி க்ஷமாபுத்ரா
ஷடைதேமமயிந்தவ: "

அநாதைப்பிள்ளை யோலம்!

தர்மாம்பிகையிடம் முறையீடு.

—:❋:—

"தர்மாம் பிகையாம் தாயவள் போற்றி!
திருவை யாற்றுறைந் திருவடி போற்றி
திருவா மூருறைத் தேவடி போற்றி
கருத்துறை நாயகி யின்னுயிர் போற்றியே!"

"போற்றி போற்றி யவள் பேரன்பு போற்றி!
போற்றியெனை யாண்டருட் திருவடி போற்றி!
தேற்றியாற்றித் தேனுறைசுவைபோல் யோகமுறையோதிய சேவடிபோற்றி
போற்றியே தானுயோகமுறை நாதமுடி வெய்தியபாதமும்."—காதற்செல்வி
(பக்தி மார்க்கம்.)

பல்லவி.

ஈதென்ன காலமோ! கலி காலமோ!
படுமோசமோ!கெடு காலமோ!

அனுபல்லவி.

தூதுவென் றேயம்மா! தம்பினன் மூஞ்சியில்
தூர்த்தப்பயலவன்! தூதுவென்றுன்னைத் தம்பினன்பாரே! † யோஓஓம்!
—(ஈதென்ன காலமோ!)

சரணங்கள்.

1. நகமும் சதையும்போல் நேசமா யிருந்தவன்
அகமும் புறமுமா யாவேசங் கொண்டிப்போ
நகமும் சதையடக் கிறியே மீறி—வெறியால்
மிகவும் மதங்கொண்டு பதங்கெட்டுத் தூதுவென்றம்மா!
தம்பினன் மூஞ்சியில் தூர்த்தப்பயலவன் தம்பினன்பாரே! †யோஓஓம்!
—(ஈதென்னகாலமோ!)

† ஒலத்துவனி ஓங்காரவீட திரக்கிளம்பல்.

2. ஆசா பாசங்க ளறவிட் டிருந்தவன் *
கூசாம லேயிப்போ கூத்துக்கு நிற்பவன் ‡
பேசாம லேயிந்தப் பேதைகள் மனத்திட்
கூசாம லிருந்தே குதிக்கின்ற கூத்தால
தூ தூவென் றவன் துப்பினன் பாமே தூ தூ வென் றன்னை ! ‡யோ ஓஓஓம்!
—(ஈதென்ன காலமோ!)

3. வேசையுங் காசைப் பெரிதென் றெண்ணுமல்
ஆசையுங் காட்டிக் காசையும் பறிக்கிறாள் !
ஆசைக் குகந்தவன் அகம்படி யானென் று
வேசையுங் காசைவிட் டாசைக் கழுகிறாள் !
ஆசையுந்தோசையு மறவிட்டார்க்கல்லவோ ! தூ தூவென் றன்னைத் துப்பி
னன்பாரம்மா ! ஓஓஓம்!
—(ஈதென்னகாலமோ !)

4. தர்மம் தலைகாக்கத் தரணியில் பிறந்தவன்
கர்மம்பெரி தென்றே நிஷ்கர்மத்தை யோதினன்
வர்மம்பெரி தென்றே வார்த்தையை விட்டவன்
கர்மத்தின் மர்மம் உணராதே பேசினன்
தூ தூவென் றன்னையே தூக்கிவைத்தின்னமும் !
—(ஈதென்ன காலமோ!)

5. என்னப்ரயோசனம் ! என் றன்னைக்கேட்டவன்
என்னப்ரயோசனம் ! என் றன்னை யுணர்ந்திலன்
என்னப்ரயோசனம் ! உன்னிபேவக்தானே
அன்னப்ரயோசனம் அடைந்தில னயினனீ
தூ தூவென் றன்னையே தூக்கிவைத்தின்னமு மேசுறானன்னையே! பாரம்மா! [ஓஓஓம்!
ஈதென்னகாலமோ! கலி காலமோ
படுமோச மோ! கெடு காலமோ !

மஹாளயபக்ஷம், மர்யாஷ்டமி. } அநாதைப்பிள்ளை.

* கல்லாலகீழலில் தக்ஷிணாமூர்த்தியாய் குருமூர்த்தங்கொண்டிருந்தவன்.
‡ பஞ்சகிருத்திய பரிகிருத்தஞ்செய்யும் ஸ்மசானேசுவர மஹாதாண்டவமூர்த்தி.

## ALLAN OCTAVIUS HUME. *

"Oh! for the touch of a vanished hand
And the sound of a voice that is still!"

## அல்லன் ஆக்டேவியஸ் ஹ்யூம்.

———:(*):———

"தோன்றிற்புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற்றோன்றாமை நன்று."—திருக்குறள்.

"சாதலின் இன்னாததில்லை." தேஹமெடுத்தவர்களுக்கு அந்த தேஹத்தை விடுதலாகிய சாதலின் "இன்னாதது" துன்பம் பயப்பது வேறொன்றில்லை. ஏனெனில் நெடுநாட் பழக்கத்தால் தேஹமும் உயிரும் ஒன்று பட்டுப்போன படியால் என்க. ஒன்றுபட்டவிடத்தில் சுகமும் இரண்டு பட்டவிடத்தில் துன்பமும் லபிப்பது சுபாவம். "உடலோடுயிர் வந்தொன்றுவ தியல்பே"—என்ற சூத்திரப்படி உடலுயிர் ஒன்றுதல் பிரகிருதி சுபாவமாம். இதற்கு எதிர்மறையாய் "உயிரில் உடல்விட்டொடுங்குவதொழிவு" என்பதூஉம் உண்மையே. இப்படியாக இயல்பும் ஒழிவும் பிரவிருத்தி நிவிருத்தி மார்க்கங்களைச் சேர்ந்ததோர் கட்டமாம். பிரவிருத்தி நிவிருத்தி மார்க்கங்கள் தர்மஸ்வரூபம். பிரவிருத்தியின்றி நிவிருத்தியில்லை; நிவிருத்தியின்றிப்பிரவிருத்தியில்லை. ஏகம் (ஒன்று) அநேகமாதல் (பலவாதல்) பிரவிருத்தி முறை. ஏகம் (ஒன்று) ந-ஏகம் (ஒன்றல்ல) ஆதல் நிவிருத்தி. ஒன்றல்லவென்றால் இரண்டாமோ எனில், அதுவுமில்லை. வேறு எந்த எண்ணுவது ஆகுமோ எனில் அதுவுமில்லை. இப்படியாக "இது அல்ல, அல்ல" வென்று தள்ளிக்கொண்டு போவதற்கு "நேதிவாக்கியம்" என்றுபேர். ந-இதி=இது வல்ல.

இதுவல்லாதது எது? வென்னில், "அது" வென்று சொல்லும் 'தத்' சப்தம் பிறக்கும். இது அசரீரிவாக்கு. ஆகாசத்திலிருந்து பிறப்பது. "அதுவானால் அதுவாவர் அதுவே சொல்லும்" என்பது ஸ்வானுபூதி பெற்ற தாயுமானவர் அனுபவவாக்கு.

"அதுவென்றால் எதுவென வொன்றெடுக்கு சங்கை, ஆதலினால் அதுவெனவும் அறவேவிட்டுச்" சுகர் முதலோர் இருந்த மனோமௌன நிலையுறுவதே மேலான சித்தி.

"சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீத லியையாக் கடை"—என்றார்.

தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார். "ஒருவர்க்குச் சாதல்போல் இன்னாதது (துன்பம் தருவது) ஒன்றில்லை. அதுவும் (அத்தன்மைத்தாகிய சாதலும்) வறியார்க்கொன்றீதன் முடியாத வழி இனிது" என்றார் பரிமேலழகர்.

சாதல் துன்பம். இது எல்லாரும் ஒப்புக்கொள்ளத்தக்கது. சாதலினும் 'பிறருக்குப் பிரயோசனமில்லாத வாழ்வு' அதிக துன்பம் தருவதாதலால் நிஷ்பிரயோசனமான அந்த உயிர்வாழ்க்கையினும் சாதல் இனியது என்றார். பூர்வ ஜன்ம பரிபக்குவத்தால் பரசேவையின் உருசியறியத்தக்க விஜ்ஞானகலருக்கு இது பிரத்தியக்ஷமாகத் தோன்றும். மற்றவர்களுக்கு இதனுண்மை அவ்வளவாக விளங்காது.

"ஈதல் அறம்" என்றாராதலின் ஈகை தர்மஸ்வரூபமா யிருக்கிறது. "ஸத்யம்வத தர்மம்சர" என்ற வேதவாக்கின் அர்த்தம், "உண்மையையுணர்: உணர்ந்தபடிநட" என்பதேயன்றி வேறல்ல. உண்மையை உணர ஸத்யத்தைச் சொல்' என்று சொல்வானேன் எனில், உண்மையை உள்ளத்தோர்ந்தபின் ஐயந்திரிபற அதை ஓதவல்ல திறமையுண்டாக வேண்டும். இது சிரவண மநநத்தால் உண்டாவது. சிரவணசித்தி உள்ளத்துணர்வு புயக்கும். மநநசித்தி ஓதுந்திறமை யளிக்கும். உண்மையை ஸ்வானுபவர்களிடம் கேட்டுணர்ந்து தியானயோகத்தால் அதை மனதிலூன்றச்செய்து பிறருணரச் சொல்லும் சொல்வன்மை (வாக்கு

* An Appreciation by Dinshaw Edulji Wacha in the September Indian Review.

வித்தி) யுண்டானபின் தான் அந்த உண்மை வழியில் நடக்கத்தகும். அப்படி நடப்பதும் வெறும் வாச்சாஞானத்தால்மட்டும் சித்திக்கக்கூடியதில்லை. வாக்கியார்த்தம் செய்துகொண்டு பூர்வ பக்ஷவாதம் செய்வதெல்லாம் ஐயந்திரிபற உண்மையை உணரவேயன்றி வேறெதற்கு மல்ல. மகாகவிசேஷத்தால் வாச்சியத்தின் அர்த்த புஷ்டியை உள்ளபடி யுணர்ந்தபின் வாச்சியத்தின் பலவித அர்த்தங்களில் உண்மைக்குகந்தது எதுவென் றுணரல்வேண்டும். இந்த உணர்ச்சி சிக்ஷை தீக்ஷைகளில் தேறினவர்களுக்கு உதிக்குமேயன்றி வாச்சாஞானம் பேசக்கற்றவர்களுக்கு ஒருபோதும் உதிக்காது. அவர்கள் மாயை மயக்கை விட்டொழிக்க வல்லவராகார்கள். மாயைமயக்குள்ள வரையில் மாயாவாதம்தான் பலிக்கும். அப்படிப் பட்டவர்களுக்கு உள்ளறிவுதித்தல் மஹா துர்லபம். இதைத் தாயுமானவர் நன்றாகச் சொல்லியிருக்கிறார்.

(1) 'வேதமுதலானகல் லாகமத்தன்மையை விளக்குமுட் கண்ணில்லார்க்கும்"

(2) "மிக்கநின் மஹிமையைக்கேளாத செவிடர்க்கும்"

(3) "விறுவாதம்புகலுவாய் வாதகோலாளர்க்கும்"

"எட்டாத முக்கணுடைமாமருந்துக் கமிர்தமே" யென்று தேவியைப் புகழ்ந்துள்ளார். அந்த தேவி "அறிவுருவாமவள்" என்பர் உண்மையுணர்ந்த அனுபவஞானிகள். இப்படிப் பட்ட "அறிவுருவு" தான் "Holy Ghost" என்று புகழப் பெற்ற தாய்ருபம். இந்தத் தாயிடத்துப் பிறந்தவர்களே பெறற்பேறும் மானுடப் பிறவி பெற்றதின் பயனையடைந்தவர்கள். இந்த "அறிவுருவு" தானே ஞானசூரியன். இதன் ஒளி அருள்வெளி. இருளிற்பிறந்த (தாய்வயிற் றுதித்த) மானிடர்கள் பல ஜன்மங்களின் வாசனையாக வுடன்கூடிவந்த தேஹவாசனையை (தேஹோஹம் என்கிற பாவத்தை) விட்டுப் புகழுடம்பெடுத்து(திவ்வியதேஹம் வகித்து) அருள் வெளியிற் பிறந்தவர்களாகவேண்டும். இப்படிப் பட்டவர் எச்சாதியிற் பிறக்கினும் எவ் வருணத்திலிருக்கினும் எத்தேசத்தாராயினும் அருட்குழவி (Children of Light) ஆவார்கள்.

"உடலோடுயிர் வந்து ஒன்றுவது" எப்படி இயல்பாமோ, அப்படியே போல் "உடல் விட்டுயிரில் ஒடுங்குவது" ஒழிவு ஆகும். இதைத்தான் "Rest" என்று யேசுநாதர் சொல்லியுள்ளார். பவரோகத்தால் கர்மமூட்டையின் சுமை தலைக்கேறி அதன பளுவு தாங்க முடியாமல் தவிக்கின்ற எல்லாரும் அருட் பிரகாசமாகிய என்னிடம் வாருங்கள்! (அருள் வெளியில்) வந்தவர்களுக்கு அருளாளனாகிய நான் அருட்குழவியாகும் பாக்கியம் அளிப்பேன்-என்று சங்கத்துவனி முழங்கியதுபோலும், சிங்கநாதம் கேட்டது போலும், நாதத்துவனி கிளம்ப அசரீரி வாக்கால் அண்டமதிரப் பேசினர். அந்த மௌனப் பிரசங்கத்தின் த்வனி இன்னமும் கேட்டுக் கொண்டிருக்கிறது. 'ஆண்டி சொல் அம்பல மேறாது" அப்படி யென்றால், சித்தர் வாக்கு மற்றவர் வாக்குப்போல் ஆகாசத்தில் போய் லயமடைந்து விடாது. "ஆகாசத்திலிருந்து கிளம்பி அண்ட பிண்டமெல்லாம் மதிர எதிரொலி செய்து கொண்டு, நித்தியமாய்க் கேட்கப்படுவதாகும்" என்பது உள்ளர்த்தம். இப்படிப்பட்ட வாக்கைத்தான் துதித்திருக்கிறார் இதன் தலைப்பில் எடுத்தாளப்பட்ட இங்கிலீஷ்அடிகள் இரண்டில் இரண்டாவதான தொன்றில. சித்தர்களின் மௌனப்பிரசங்கம் சித்த புருஷர்களுக்கும் நாதானுசந்தானத்திற்றேறிய தீக்ஷாபுருஷர்களுக்கும் கேட்கத்தக்கதாயினிலும், மற்றவர்களுக் கேட்காது. ஏனெனில் அது நாதவொலி மாத்திரமாயுள்ளது. ஆதலால் தான் மஹாப்பிரளயம் வரையில் நிலைத்திருக்கும சக்தி வாய்ந்திருக்கிறது.

"காணுக்கண்" "கேளாச்செவி" பென்றது போல்"ஸ்பரிசதன்மாத்ரை கடந்த வொன்றெதுவோ அதன்ஸ்பர்சமே"Touch of a vanished hand" என்று உண்மையில் உணரப்பெறும். அதை நாம் "அபயவரதஹஸ்தம்" என்று சொல்கிறோம். மௌனவாக்கை அசரீரிவாக்கென்றும் ஆகாசவாணியென்றும் சொல்கிறோம். இதை ஊமையெழுத்தென்று பிள்ளையார் சுழியால் சுட்டுவதுண்டு. அபயவரத ஹஸ்ததரிசனமாவதற்கு நடராஜர் தூக்கின பாதத்தால் (குஞ்சிதபாதமென்பர் இதையே) உதைபடல் வேண்டும். மோனத்திலொடுங்கிய வாக்குத்வனியை "மோனகானம்" (Music of the Spheres) என்பர்.

"மோனகுருநாதர்நடமாடிவருசிலமுறு
கானமிகுநாதவொலிகேட்டெழுந்துணர்வினுள்ளே"

யென்றதனால் முதலில் குறிக்கப்பட்ட இங்கிலீஷ் அடிகளிரண்டின் உள்ளர்த்தம் நன்றாகவிளங்கும். இந்த இரண்டடிகளையும் பம்பாயில் பிரசித்தி பெற்றவரான மிஸ்டர் டின்ஷா எடல்ஜி வாச்சா என்பவர் காலஞ்சென்ற மிஸ்டர் அல்லன் ஆக்டேவியஸ் ஹ்யூம் (A. O. Hume) அவர்கள் இகவாழ்வை நன்குமதித்து அவர் புகழுடம்பெடுத்ததைப் பற்றி ஆகஸ்டு மாசத்து இந்தியன் ரிவியூ என்னும் மாதாந்தப் பத்திரிகைக்கு எழுதியுள்ள வியாசத்திற்கு மேற்கோளாக வெடுத்தாண்டிருக்கிறார். இந்த மிஸ்டர் ஹ்யூம் இந்தியாவுக் குழைத்ததை முதல் முதல் காங்கிரஸ் சபை சென்னைக்கு வந்தது முதல் நேரில் பார்த்துணர்ந்த நாம் அந்த மேற்கோளின் உண்மைப் பிரபாவத்தி லீடுபட்டவராய் அவருடைய இகவாழ்வை யெல்லாம் ஒரு திருவாழ்வாக மதித்து "தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார், தோன்றலிற் றோன்றாமை நன்று" என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவர் வாக்குக் கிலக்காக விருக்கக் கண்டு இந்த மட்டும் வளர்த்தியெழுதலானோம். அவருடைய குணவிசேஷங்களைப் பற்றிப் பின்னொருமுறை விவேகசிந்தாமணியி லெழுதலாகும்.

---

## "In The Kingdom of God Within"

### "The Origin of Life."

### குஹாப்யமஸ்ம் தத்ஸத்.

### சக்திமான்—சக்தி.

Origin of Life.

---

"ஊரிலான்குணங் குறியிலான் செயலிலா னுரைக்கும்
பேரிலானொரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரிலான்வரல் போக்கிலான் மேலிலான் தனக்கு
நேரிலான்நகக் கடவுளா யென்னுளே நின்றான்."

"உயிர் எனப்படுவது உண்மையிற் சக்தி." இது ஸத்தியம். சக்தி யில்லாவிட்டால் ஜடமாகும். ஆனால் ஜடமும் ஒரு சக்தியே. ஏனெனில் இருந்த விடம் விட்டு நகராதிருத்தலும் ஒரு சக்தியே யல்லவோ? ஆகையால் சக்தியொன்றே ஜீவசக்தி யென்றும் ஜடசக்தி யென்றும் இருவகைப்படும். இந்த ஜடஜீவ சக்திகளிரண்டும் ஆதிபராசக்தியின் தோற்றங்களாம். அனாதியாயுள்ள அபின்னசக்தியின் பின்னமே ஆதியாகிய பின்னசக்தி. பின்னம் என்றால் பிரிவு பட்டது. அபின்னம் என்றால் பிரிவுபடாதது. இந்தப் பின்னாபின்ன சக்திகளின் மஹிமையினாலே சிருஷ்டிஸ்திதி ஸம்ஹார திரோபவா னுக்ரகங்களும் இவற்றிற்கெல்லாம் மேலாயுள்ள அத்வைதானந்த அனுபவமும் லபிக்கின்றன.

டண்டி யென்னும் பட்டணத்தில் கூடிய பிரிடிஷ் அஸோஸியேஷன் சபையின் வருஷாந்தக் கூட்டத்தில் மேற்றிசைச் சாஸ்திர நிபுணர்கள் கூடி உயிர் உண்டானதின் ஆதிமூலத்தைக் கண்டு பிடிக்கச் செய்த பிரயத்தனங்களின் பயனைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். அதில் ஒரு நிபுணர் ஒன்று சொல்ல, மற்றொருவர் மற்

றென்று சொல்ல யானைகண்ட குருடர்போல் ஒவ்வொருவரும் அவரவர் கண்டதே காட்சியாகப் பேசலாயினர். முன்னொருவர் 'உயிர் ஸ்படிசாத்மக லிங்கத்தினின் றுற்பத்தியானதாகச் சொன்னார். இப்பொழுது அவரிலும் பெரியவர் ஒருவர் செத்துச் சுண்ணாம்பான ஜடசத்திலிருந்து உயிர் உண்டானதாகச் சொல்கிறார். உயிர் சத்திலிருந் துண்டாயிற்று என்பது வேதபூமியாகிய இப்பாரதக்கண்டத்தில் பாரதவர்ஷத்தார் வேதாந்த சித்தாந்த அநுபவமாகக் கண்டுபிடித்து நிர்ணயித்த உண்மை. இங்கே சத்-அசத் வித்தியாசத்தைப்பற்றி தர்க்க நியாய விவாதம் செய்யத் தருணமில்லை.

சத் (Being) என்பதிலிருந்து சித் (Becoming) என்கிற சக்தியுண்டானதுபோல் அசத் (non-being) என்கிற தோற்றமும் உண்டாயிற்று. சத்+சித் இரண்டும் சேர்ந்தே ஆநந்தம் ஆயிற்று. ஆகையால் உயிருண்டானது சச்சிதானந்தரூபமாகிய சிவத்திலிருந்தென்ப துண்மை.

சிகாரம் சக்திமானைக் குறிக்கும். வகாரம் சக்தியைக் குறிக்கும். இவையிரண்டும் இணைபிரியாத தன்மையன. நெருப்புக்குச் சூடும் நீருக்குக் குளிர்ச்சியும்போல் குணகுணி பாவமாக நிற்றலின் சக்தியென்பது சக்திமானோடு பிரிவிலதாய் மரத்திற்கு வைரம்போல் அபின்னமாய் அத்வைதப்பட்டு நிற்கும்.

"உயிர் எனப்படுவது உண்மையிற் சக்தி." சக்தியென்றால் வல்லமை. சத்தோடு அபின்னமாய் அத்விதமாயிருப்பது சித்தானாலும், அது தோற்றமாய் (பிரபஞ்சமாய்)ப் பரிணமித்த காலத்து அசத்தும் அதோடுகூட வுதித்தது. சத்-அசத் என்று சொல்லும் 'உயிருடல்' சம்பந்தமும் அதனாலேயே தோற்றியது.

அநாதியாயுள்ள சத் (Being) ஆதியில் சத்-அசத் ஆகி, அதிலிருந்து அசத்தாகத் தோன்றிற்று. இந்த அசத் தானே ஜடவஸ்து. ஆனால் இது பாவனா மாத்திரமே யொழிய உண்மையில் சன்மாத்ரமின்றி வேறெதுவுமில்லை. சத் என்பது Noumenal Existence. அசத்என்பது அதன் தோற்றமாகிய *Phenomenal Mode* of Existence. முன்னது உண்மை (எப்போதும் உள்ளதன்மையுடையது). பின்னது பரிணாமம் (தோன்றி மறையும் தன்மையது). "அதபத்யு: அதிஷ்டானம்" என்பது மதங்காகமத்தில்வரும் சுலோகம். அது சக்திக்கும் சக்திமானுக்குமுள்ள பிரிவிலாத்தன்மையை உணர்த்துவதாகும்.

சக்தியே உலகிற்குக் காரணம். சக்தியின்றேல் யாவுமின்று. சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹார திரோபவ அநுக்ரகம் என்கிற ஐந்தொழிலுக்கும் கருவி காரணமாயிருப்பது (Instrumental cause) சக்தியே.

சௌந்தரிய லஹரியில் ஆதிசங்கரர் சக்தியை ஸ்துதித்துள்ளபடி,—

"சிவமெனும் பொருளும் ஆதி சக்தியொடு
சேரின் எத்தொழிலும் வல்லதாம்
இவள்பி ரிந்திடின் இயங்கு தற்குமரி
தரிதெனா மறைவி ளக்குமால்
நவபெ ரும்புவன மெவ்வ கைத்தொழில்
நடத்தி யாவரும் வழுத்துதாள்
அவனி யின்கண்ஒரு தவமி லார்பணியல்
ஆவதோ பரவ லாவதோ."

ஆகையால் ப்ரிடிஷ் அஸ்ஸோஸியேஷன் சங்கப்புலவர் ஐம்புலனடக்கிச் சித்த விருத்தி நிரோதஞ்செய்த விவேக ஞானத்தால் உயிர் மூலம் கண்டுணரலாமே யொழிய, புலன்பொறி வழி யோடிப்போய் ஜாலமெல்லாமியற்றும் புன்மனப்புத்தியால் உணருதல் ஆகாது. ஆயினும் அவர்களும் நல்வழிப்பட்டே நயம்பட வுழைத்து வருகிறார்கள்.

அரசனது ஆஞ்ஞாசக்தியானது, மந்திரி பிரதானி, படைத்தலைவன், நியாயாதிபதி முதலாக்கீழ் நின்ற போலீஸ்சேவகன் இறுதியாகவுள்ள அங்கத்தார் மாட்டுப்பதிந்து காரிய வேறுபாட்டாற் பலவகைப்படல் போல

இதய கமலத்திலுறை தகராகாசத்திலுள்ள குஹசக்தி யொன்றே (the Kingdom of God within) இச்சித்தல், அறிதல், செய்தல், என்னும் வேறுபாட்டால் இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி என மூவகையாகவும், இம்மூன்று சக்திகளும் பின்னர் அவாந்தர வேறுபாட்டால் அநந்த சக்தியாகவும் வியாபகரிக்கும். இப்படி முச்சக்தியாகவும் பின்னர் அநந்த சக்தியாகவும் வியாபரிக்கும் சக்திகள் எல்லாவற்றிற்குள்ளும் அந்தர்யாமியா யிருப்பவன் சக்திமான். இந்த சக்திமான் 'இதய புண்டரீகம்" என்று சொல்லும் கமல கர்ணிகை மத்தியிலுள்ள திருச்சிற்றம்பலம் என்று சொல்லும் அழகிய தஹராலயத்தில் வசித்துக்கொண்டு "எங்கணும் வியாபி" யாயிருத்தலால் "குஹப்ரஹ்மம்" என்று சொல்லப்படுகிறுன். இவனையே சிவகுமாரன் என்றும் குமரக்கடவுள் என்றும் சுப்ரஹ்மணியன், ஸ்வாமிநாதன் என்றும் தண்டபாணி யென்றும் வேலாயுதன் என்றும் உள்ள ஸஹஸ்ர நாமங்களால் பெரியோர் தொழுதேற்றித் துதித்திருக்கிறுர்கள். இவனையே யேசுநாதர் "Son of God" என்றும் "Christ" என்றும் சுட்டாமற் சுட்டிக்காட்டிச் சூக்ஷ்மமாய்ச் சொல்லியிருக்கிறுர். இவனில்லாத உயிர் இல்லை. இந்த சக்திமான் ஒருவனே. இவனே எல்லாச் சக்திகளுக்கும் அதிஷ்டானமாயுள்ளவன். இந்த வுண்மை விளங்கவே இவர் சக்தியாயுதமாகிய வேல் தரித்த மார்பன் ஆதலால் வேலாயுதன். கையில் தண்டம்ஏந்தி சகுணத்தினும் நிர்க்குணம் பெரிதென் றுபதேசிக்குமுண்மைக் குருவாயிருத்தலால் இவர் தண்டபாணி. வேலாயுதனுக்கு வேல் எப்படியோ அப்படிப்போல சக்திமானுக்குச் சக்தி. அவயவ அவயவி போல, சக்தியும் சக்திமானும் அபேத பாவத்துக் கிலக்காகிறதை நன்றுகக் கவனித்து உள்ளமுணர மனத்திலிருத்தவேண்டும்.

சக்திமானது சக்தியானது,—

(1) இச்சாசக்தியாக வியாபகரிக்கும் போது இச்சிதா வென்றும்,

(2) ஞானசக்தியாக வியாபகரிக்கும் போது நாதா வென்றும்,

(3) கிரியா சக்தியாக வியாபகரிக்கும போது கர்த்தா வென்றுங்,

(4) அநந்த சக்தியாங் காலத்து அநந்தர் என்றும்,

பெயர்பெற்று விளங்குவதாகும். வியாபக விசேஷத்தால் இப்படி மூன்றுகவும், நான்காகவும் பிரிந்த சக்தி தொழில்பற்றி ஸ்தூல சூக்ஷ்மகாரணம் என்கிற திரிபுராத்மகமாய் பஞ்சகிருத்யங்களையும் நடத்த ஐவகைச் சக்திக் கூட்டங்களாகப் பிரியும். இவையே பின்னும் அனந்த சக்திகளாகப் பிரியும். இப் பிரிவினையினாலே யுண்டாவது தத்துவங்கள். இந்தத் தத்துவங்களை யுணர்ந்தார்க்குத் தத்துவஞானியென்றும் பிரத்தியக்ஷப் பிரமாணமா யறிந்தவர்களுக்குத் தத்துவதரிசியென்றும் பேர். இவர்களை மாயை மயக்காது. ஏனெனில் இவர்கள் சக்திமானருளாலே சக்திகளின் பல்வேறுபாடான கூறுகளாகிய தத்துவங்களின் வன்மையை உள்ளபடி யறிந்தவர்கள். ராஜபேட்டியிலே அரசனருள் பெற்றவன் அவனது ஆஞ்ஞை நடத்தும் மந்திரி பிரதானிகள் முதல் சேவகனீறுகவுள்ள எல்லாராலும் மதிக்கப்பட்டு அவர்களால் தடையின்றிச் செல்வதுபோல சக்தி யுபாஸனையால் சக்திமான் சக்தி யிவைகளின் அபேதத்தை யுணர்ந்து சக்திமானருள் பெற்றவர் தத்துவக் கூட்டங்களால் பாதிக்கப் படாதவர்களாகிறுர். "மனமாயை மாயை" யென்றபடி தத்துவக் கூட்டங்களெல்லாம் அரசனின் பரிவாரங்கள்போல, புருஷனை மயங்கச் செய்யும். ஆகையால் சக்திமானுடைய அருளால் (அரசன் ஆஞ்ஞையாலே) தத்துவ தரிசனம் கண்டவன் அவர்களால் மயங்கு

வதில்லை, எனென்னில் அவர்களுடைய அதிகார மூலம் இன்னதென்று அவனுக்குத்தெரியும். அரசனைத் தெரிந்த காரணத்தால் அவன் மந்திரி பிரதானி முதலிய எல்லாரையுந் தெரிந்தவனாகிறான்.

"சத்திதான் பலவோ வென்னிற்தானொன்றே யனேக [மாக
வைத்திடுங் காரியத்தால் மந்திரி யாதிக்கெல்லாம்
உய்த்திடு மொருவன் சத்தி போலா னுடைய தாகிப்
புத்திமுத் திகளையெல்லாம் புரிந்து அவன் நினைந்த
வாறும்."

"ஒன்றதா யிச்சா ஞானக் கிரியையென் றொருமூன் [றாகி
நின்றிடுஞ் சத்தி யிச்சை யுயிர்க்கருள் நேசமாகும்
நன்றெலா ஞான சத்தி யால்நயந் தறிவ னாதல்
நன்றருட் கிரியை தன்னால் ஆக்குவன் அகிலமெல் [லாம்."

மேலே சொன்ன கிரியாசக்தியானது—

| கூறுபாடு. | வடிவம். | கிருத்தியம். |
|---|---|---|
| (1) ஜநநி<br>(2) ரௌத்ரி<br>(3) ஆரணி | இவை மூன்றும் சக்திமானுக்குச் சூக்ஷமவடிவாகும். | (1) படைப்பு<br>(2) காப்பு, மறைப்பு<br>(3) அழித்தல், அருளல் |
| (4) ஈசானி<br>(5) பூரணி<br>(6) கீர்த்தி<br>(7) வாமை<br>(8) மூர்த்தி | இவை ஐந்தும் சக்திமானுக்கு ஸ்தூல வடிவாகும். | (4-8) ஸ்தூல பஞ்ச கிருத்தியங்கள். |

—எனப் பிரிவுற்றுச் சக்திமானுக்குக்கருவி காரணமாகவும் உபாதநகாரணமாகவு மிருக்கும்.

இதையே இன்னொரு விதமாகவும் சொல்லலாகும். குமாரக்கடவுள் வல்லமையொன்றே பலவித சக்திகளாகப் பிரிந்து தோன்றும். அவற்றைப் பின் வருகிறபடி தெள்ளிதில் விளக்குவாம்.

Origin of Life (சக்தி மூலம்)
The First Cause—சக்திமான் (குஹப்ரஹ்மமாகிய குமாரக்கடவுள்.)

I. பரை (சக்திமானின் சொந்தமான சிற்சக்தி) (Efficient-Cause)
(1) இரக்ஷை
(2) சக்திலை
(3) அசிதை
(4) சிருஷ்டினை
(5) உன்மனை

II. பராபரை (உலக உபாதனகாரண சக்தி) (Material Cause)
(1) இச்சாசக்தி
(2) ஞானசக்தி
(3) கிரியாசக்தி
(4) ஆதிசக்தி

III. அபரை (சக்திமானின் பரிக்கிரக சக்தி) (Co-efficient Cause)
(1) பிராமிசக்தி.
(2) வைஷ்ணவி.
(3) ரௌத்ரி.
(இம்மூன்றும் அந்தணர் காலை உச்சி, மாலைகளில் தியானிக்கும் சக்திகள்.)

அபரையின் அம்சமாகிய—

(1) பிராமி சக்தி.—100-கோடி விசாலமுள்ள இரக்தநிற மண்டலத்தில் சகல உலகங்களையும் படைத்தற்குக் காரணமா யிருப்பள்.

(2) வைஷ்ணவி சக்தி.—2-கோடி விசாலமுள்ள சுவேத மண்டலத்திற் காத்தற்குக் காரணமா யிருப்பள்.

(3) ரோளத்ரி சக்தி.—3-கோடி விசாலமுள்ள விந்து மண்டலத்தில் அழித்தற்குக் காரணமாயிருப்பள்.

சக்திமானின் உபாதனகாரண சக்தியாகிய பராபரை திரிகுணாத்மகமாய்த் திரிந்து I. ஞானமேயாக வியாபகரித்து நின்றபோது,—

| சக்தியின் பேர். | சக்திமான் பேர். |
|---|---|
| (1) சிவதத்துவம் | (குஹன்) |
| (2) லயதத்துவம் | (லயன்) |
| (3) நிஷ்களதத்துவம் | (நிஷ்களன்) எனவும். |

II. கிரியையாக வியாபகரித்த காலத்து,—

(1) சத்திதத்துவம் (சத்தன்.) எனவும்,

III. இரண்டுஞ் சமமாக வியாபகரித்த காலத்து,—

| சத்தி | சத்திமான். |
|---|---|
| (1) சதாசிவதத்துவம் | (சதாசிவன்) |
| (2) யோகதத்துவம் | (யோகன்) |
| (3) உத்தியுத் தத்துவம் | (உத்தியுத்தன்) |
| (4) சகள-நிஷ்கள தத்துவம் | (சகள-நிஷ்களன்) எனவும். |

IV. இச்சையாக வியாபகரித்தபோது,—

| | |
|---|---|
| (1) ஈசுர தத்துவம் | (ஈசுரன்) |
| (2) அதிகார தத்துவம் | (அதிகாரன்) |
| (3) பிரவிருத்தி தத்துவம் | (பிரவிருத்தன்) |
| (4) சகள தத்துவம் | (சகளன்) |

எனவும் பெயர்பெறும். இப் பன்னிரண்டு திருநாமங்களையும் அவரது பன்னிரு திருக்கரப் பாங்கால் உய்த்துணரல் வேண்டும். இக் காரணத்தால் லயசிவன், யோகசிவன், அதிகார சிவன் என்பதுபோல, லயகுகன், யோகுகன், அதிகாரகுகன், என்னும் மூவகைச் சத்திமானும் அவரே யென்பது தெளியப்படும்.

லயகுகன்—உயிரை ஒழிவில் ஒடுக்கி "ஒழிவிலொடுக்க" மென்னும் பதவியைத் தருவர்.

யோககுகன்—ஒடுங்கின உயிரை விரியச் செய்து ஸ்தூலபஞ்ச கிருத்யத்தால் பூத சிருஷ்டிகளைச் செய்து தானே போக்தாவும் போக்கியமாகவுமிருந்து போகிக்கப்படும்பொருளைத் தனக்கு அந்நியமாகக்காணாத அருமையான யோகசத்தியை அளிப்பர்.

அதிகாரகுகன்—பஞ்சகிருத்தியங்களையும் கடத்தி ஸ்தூல சூக்ஷ்மகாரண மென்னும் திரிதேஹங்களிலும் அந்தரியாமியாய் ஊடுருவி நின்று துரியநிலை மஹத்துவத்தால் நைஷ்கர்மஸித்தி யென்னும் மஹிமைபொருந்திய கர்த்தத்துவ அதிகாரத்தையளிப்பர். இவ்வதிகாரியைக் கர்மங்கள் பந்திக்க மாட்டா.

| சத்திமான் | சத்திகிருத்தியம். |
|---|---|

லயகுகன்—Process of Involution.

யோககுகன்—Process of Evolution (c.f. Bergson's Creative Evolution.)

அதிகாரகுகன்--Evolution and Involution combined working for Universal Progress or the Process of Universal Progression.

குகன்–Immanent God (Son of God) (c.f."Lo! the Kingdom of God is within".)

சிவன்—Transcendent God. (Cf. "Our Father in Heaven.")

நவ வீரர்கள்—நவ வ்யூகமான உலக சிருஷ்டியின் அதிஷ்டான சத்திகள். இவரைப் பொதுவில் "Son of Man" என்று சொல்லுதலாகும். (மன்குல குமாரர் என்னலாம். ஏனெனில் நவ சத்தியினின் றும் தோன்றினவராதலால்.)

ஆயுதங்களிற் சிறந்தது வேலாயுதம். அதற்கே சத்தியாயுதம் என்னும் பேர் பொருந்தும். அந்த வேல் தரித்தவன் வேலாயுதன்: இவனே சத்திமான். சத்திமானே தர்மவானவன். தர்மம் பிரவிருத்தி நிவிருத்தி யென இருவகைப்படும்: பிரவிருத்தியிலிவன் தேவசேனாதிபதி. துஷ்டநிக்ரக சிஷ்ட பரிபாலன தீக்ஷை பூண்டவன். நிவிர்த்தியில் பழநியாண்டி. (சித்தன்), ஸ்வாமிநாதன், சிவகுருநாதன் (குருமூர்த்தம்) ஆவன்.

—:(o):—

## Wisdom is All-Powerful.

## விவேகத்தினாலாகாததில்லை.

உலகத்தில் விவேகத்தைவிட உயர்ந்தபொருள் ஒன்றுமேயில்லை. பொன் நவமணி முதலிய விலையேற்றமுள்ள சகல வஸ்துக்களும் இதற்குச்சமானமாகா. விவேகமொன்றினால் விலங்கு பறவை, ஊர்வன, நீர்வாழ்வன முதலிய சமஸ்தஜீவராசிகளினும் மனிதர் மேம்பட்டு விளங்குகின்றனரேயல்லாமல் வேறொன்றினாலுமன்று. விவேகம் ஒன்றுமாத்திரம் இல்லாவிட்டால் ஒரு

வன் மனிதனாகப்பிறந்தும் இம்மை மறுமைகளி லடையவேண்டிய பிரயோசனங்களைச் சிறிதும் பெறமாட்டான். மின்சாரதபால், ரோலியந்திரம் முதலான மிக்க அற்புதமான பொருள்களெல்லாம் அவற்றைக் கண்டுபிடித்தவர்களுடைய அறிவின் மேன்மையை விளக்கிக் காட்டுகின்றனவேயன்றி அவர்களுடைய ரூபம் பொருள் முதலியனவற்றைச் சிரேஷ்டமாகத் தெரிவிக்கவில்லை. ஆதலால் அறிவே பிரதான வஸ்துவன்றி மற்றவை அவ்வளவு சிறப்புடையவல்ல. விவேகவிளக்கம் பெற்றவனுக்குச் சொந்த தேசமென்றும் அந்நியதேசமென்றுமில்லை. எல்லாம் சுயதேசமே. பகைவரென்றும் சிநேகரென்றும் அவனுக்கில்லை. அவன் அவரவர்களுக்குத் தக்கபடி நடக்துசொள்ளும் புத்தி சாதுரியத்தால் யாவரும் அவனுக்கு நட்பினராகவே யிருப்பர். அறிவாளனாகிய ஒருவருடைய நட்பை யாவரும் விரும்புவர். அரசனும் அவனுடைய சிநேகத்தை அபேக்ஷித்து அவனுக்கு வேண்டியவற்றைச் சன்மானிப்பான்.

"அறிவுடையொருவனை அரசரும் விரும்புவர்" என்று பெரியோர் கூறியுள்ளனர். அறிவுடைபோன் எப்படிப்பட்ட ஆபத்துவரினும் தப்பித்துக்கொள்ளுவான். யாவரையும் உபாயத்தில் வெல்லுவன். அவனை வெல்வதற்கு ஒருவராலும் முடியாது. அறிவின் கூர்மையால் ஒரு வர்த்தகன் ஒரு பூதக்தையும் வென்று மிக்கப் பிரயோசன மடைந்தனன். அது எப்படியென்றால்:—

ஒரு பட்டணத்தில் தனஞ்செயன் என்னும் ஓர் வர்த்தகனிருந்தனன். அவன் வழக்கமாய் இராக்காலங்களில் வெளியூர்ச் சரக்குகளைத் தானிருக்கும் பட்டணத்திற் கொண்டுவந்து விற்று வருவான். அவ்வாறு இராக்காலத்தில் சரக்குகள் கொண்டுவருபவன் தன் பட்டணத்து ஆயத்துறை வழியாய் வந்தால் சுங்கம் கொடுக்கவேண்டுமென்று எண்ணி அவ்வழி வாராமல் வேறொரு கள்ளமார்க்கமாய்ப் பட்டணத்துக்குச் சரக்குகளைக் கொண்டுபோய் வர்த்தகம்பண்ணி ஜீவித்து வந்தான். இவ்வாறு நெடுநாள் செய்துவருகையில் ஒருநாள் அர்த்தராத்திரியில் வெளியூரினின்றும் சரக்குகள் கொண்டு தான் வழக்கமாகவரும் கள்ளவழியாய்ச் செல்லுகையில் ஒருபூதம் கீழே குதித்து அவனைத் துரத்திக்கொண்டுவர, அவன் காலடி புட்டத்திற் படும்படி மிகவும் விரைந்தோடியும், தலைமேலுள்ள மூட்டையின் பாரத்தாலும், பருத்துச்சரிந்த தொந்தியின் பளுவாலும் மிக்க ஆயாசமடைந்து நின்று, ஓர் சமயோசித யுக்தியால் பயமொழிந்து தைரியங்கொண்டு பின்தொடர்ந்து துரத்திவரும் பூதத்தைநோக்கி, கலகலவென்று சிரித்துக் கைகொட்டி "நீயா துரத்திக்கொண்டு வருகிறாய்? அந்தோ! நான் தெரியாமல் வீணே கால்கள் நோக இவ்வளவுதூரம் ஓடிவந்தேனே!" யென்று மிகவும் அலக்ஷியபாவமாகச் சொன்னான். அதுகேட்ட பூதம் திடுக்கிட்டு, இவன் நமக்கிரையாகத்தக்க சாமானிய மனிதன்; அப்படியிருக்க, நம்மிடத்தில் சிறிதும் பயமில்லாமல் மிகவும் அலக்ஷியமாகச் சிரித்துப் பேசுகின்றானே! இதன் காரணத்தை அறிவோமென்றெண்ணி அந்த வர்த்தகனை நோக்கி, "நீ என்னை வேறு யாவரென்றெண்ணித்தான் இவ்வளவுதூரம் ஓடிவந்தனை? யென்று கேட்க, "இப்பட்டணத்திலுள்ள ஆயக்காரனென்றெண்ணி இவ்வளவுதூரம் பயந்து வந்தேனே யல்லாமல் நீதுரத்தி வருகிறாயென்று தெரிந்தால் ஓரடியும் அப்புறம் எடுத்து வைக்க மாட்டேனே" யென்று அவன் சொன்னான். இதுகேட்டப்பூதம் வியப்பும் பயமுங்கொண்டு அவனைநோக்கி, 'அந்த ஆயக்காரன் என்னினும் வல்லவனோ?' என்று கேட்டது. வர்த்தகன், அந்த 'ஆயக்காரனுடைய வல்லமைக்கும் கொடுமைக்கும் அளவேது? அப்படிக்கு இல்லாவிட்டால் யாருக்கும் அஞ்சா நெஞ்சமுடைய நான் இவ்வளவு திகில்கொண்டு ஓடிவருவே

ணே!' என்று மிகவும் வற்புறுத்திக் கூறினான். அப்படியானால் எனக்கு அந்த ஆயக்காரனைக் காட்டென்று பூதம்கேட்க, "இப்படிவந்தால் நீ அவனைக்காணமாட்டாய்! இந்த சரக்கை என்வீட்டில் கொண்டுபோய் சேர்த்துவிட்டு மறுபடியும் இந்தக்கோணியைக்கொண்டுவந்தால், நான் உன்னை இந்தக்கோணிப்பையில் போட்டுக் கட்டிக்கொண்டு போகிறேன். அப்போது நீ அவனுடைய வல்லமையையும் கொடுமையையும் காண்பாய்'என்று அவன்கூறப் பூதமதற் கிசைந்தது. பின்பு வர்த்தகன் அந்த பூதத்தைக் கோணிப்பையில் போட்டுக்கட்டி மூட்டைபோல் தலையில்வைத்துக்கொண்டு ஆயத்துறைவழியே செல்லுகையில், ஆயக்காரன்வந்து "நீயார்? இந்தமூட்டையில் என்ன?" என்று வினவினான். அதற்கு தனஞ்செயன் பதில் சொல்லாது மௌனமாய்ச் சென்றமையால் ஆயக்காரன் கோபித்துவந்து தலைமீது இருந்த மூட்டையைக் கீழே தள்ளிக் காலால் பலதரம் உருட்டி உதைத்துத் தன்கையிலுள்ள எழுத்தாணியால் பலவிடங்களில் குத்திப்பார்த்து, இது என்னசரக்கென்று வர்த்தகனைக்கேட்டான். அவன் இது புளிமூட்டையென்று ஆயக்காரனிடத்தில் சொல்ல அவன் இது புளியோ அல்லவோ என்பதைக் கண்டறியும்படி பின்னும் எழுத்தாணியால் மூட்டை முழுவதும் குத்திக்குத்திப்பார்த்தான். பிறகு தனஞ்செயன் அதற்குறிய சுங்கத்தைக் கொடுத்துவிட்டு மூட்டையை எடுத்துக்கொண்டு கொஞ்சதூரம்போய் அதனை அவிழ்த்துப் பூதத்தை வெளியேவிட, அது அவனைப்பார்த்து அப்பா! நீ சொன்னயாவும் உண்மையே. அந்த ஆயக்காரன் மிகக் கொடியவன். அவன் என்னை உதைத்து எழுத்தாணியால் குத்தினபடியால் என்சரீரமெல்லாம் சல்லடைக்கண்கள் போலாயிற்று! அவனை நினைத்தால் இன்னும் என் உள்ளம் நடுங்குகிறது! கர்ப்பம் கலங்குகிறது. நீ என்னைத் தூக்கிக்கொண்டுவாராமல் சிறிதுநேரம் அங்கு வைத்திருப்பையேயானால் நான் செத்தேபோயிருப்பேன். நீ அந்தச்சமயத்தில் செய்தநன்றிக்கு நான் என்னகைம்மாறு செய்யப்போகிறேன். எனக்குப் பிராணபிச்சை தந்த உனக்கு இம்மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் பரிசாகக்கொடுத்தாலும் அந்த நன்றிக்குச் சமானமாகாது. ஆயினும் என்னால்கூடிய உதவியேதாவது செய்தலேவேண்டும், நான்செய்தே ஆகவேண்டும். இந்நகரத்து அரசன் மகளை நான்போய்ப் பிடித்துக்கொள்ளுகிறேன். எவ்வளவு வல்லமையுள்ள மாந்திரிகன் வந்தோட்டினாலும் போகேன். நீ வந்து ஆயக்காரன் என்று கூறிய மாத்திரத்தில் விட்டுப் போவேன். நீ அரசனிடத்தில் வேண்டிய பொருள்பெற்றுச் சுகித்து வாழ்ந்திரு என்று பூதம் கூறிப்போய் அரசன் மகளைப்பிடித்துக் கொண்டது.

மாந்திரிகத்தில் வல்லவர்கள் பலர் வந்து தங்களால் கூடிய மட்டில் ஓட்டமுயன்றும் அது போகாமையைக் கண்டு அரசன் பெருந்துயருற்று இப்பூதத்தை ஓட்டுபவர்க்குப் பதினாயிரம் பொன் தருகிறேனென்று பறையறைவிக்க, வர்த்தகன் போய் அரசன் அனுமதியின்மேல் இராஜபுத்திரியருகிற் சென்று ஆயக்காரன் என்னும் பெயரைக்கூறிய மாத்திரத்தில் அப்பூதம் விட்டு விட்டுப் போய்விட்டது. அது கண்ட அரசன் அளவிறந்த மகிழ்ச்சி யடைந்தான். முன்சொல்லியிருந்தபடி பதினாயிரம் பொன்னையன்றி இன்னும் வேண்டிய பரிசுகளையும் அவனுக்குத் தந்து அனுப்பினான். பிறகு அப்பூதம் வேறொரு அரசன் மகளைப் பிடித்துக்கொண்டது. வர்த்தகனை அவ்வரசன் பிடிக்கவே அங்கும்போய் ஆயக்காரன் என்றுசொல்ல அப்பூதம் நீ ஏன் இங்குவந்தாய்? என்று கோபித்துக்கேட்க, ஆயக்காரன் உன்னை தேடிக்கொண்டு வருகிறான்: அது கூறும் பொருட்டு இங்கு வந்தனனென்று சொல்லவே, பூதங்கேட்டு நல்ல காரியஞ்செய்தனை இனிமேல் நானிருக்கும் இடமெங்கும் வாராதே

யென்று கூறி அவ்விடம் விட்டு நீங்கி மற்றொரு தேசத்தரசன் மகளைப்போய் பிடித்துக் கொண்டது. வர்த்தகன் அரசனிடத்தில் மிகுந்த பொருள் பெற்றுக்கொண்டு திரும்பினன். சுற்றுப் பக்கங்களிலுள்ள பிரதேசங்களெங்கும் தனஞ்செயன் பூதம் ஓட்டுவதில் மஹா வல்லவனென்று பெயர் வந்தபடியால் இம்மூன்றாவது அரசனும் தன்னைப் பலவகையாலும் பிடித்தபடியாலே மறுபடியும் பூதமிருக்குமிடத்தை நாடிச்சென்று அங்கும் ஆயக்காரன் என்னும் பெயரை அவன் கூறியபோது பூதம் கோபாவேசங் கொண்டு, அவ்வர்த்தகனைக்கொல்ல வரவும், அவன்: "ஆயக்காரன் இறந்து போய் விட்டனன், அச்சுபச்சேதிகூற வந்தேனென்று மொழிந்தனன். பூதம் கோபம் தணிந்து இன்றோடு என் பீடையொழிந்தது. நீ இவ்வரசனிடத்தில் வேண்டிய நிதி பெற்றுக் கொண்டுபோய் வாழ்கவென்று கூறியது. அதற்கு வர்த்தகன் ஒன்று வேண்டும் நீ இனிமேல் இந்த பிராந்தியத்திலிராமல் நூறு யோசனைக்கப்புற முள்ளயாரையாவது போய் பிடித்துக் கொள்ள வேண்டியதே யன்றி அதற்குள்ளேயிருக்கும் எவரையும் பற்றி யலைக்கக்கூடாது. இது தான் நீ எனக்கு செயற்பாலதாகிய கடைசி உதவியென்று அதைக் குறையிரக்க, அது அப்படியே ஆகட்டுமென்று கைபோட்டு வாக்கு தத்தஞ்செய்து அந்தப் பிரதேசத்தை விட்டொழிந்தது. பிறகு தனஞ்செயன் திரண்ட பொருள்பெற்றுக் குபேரனைபோல் சுகித்து வாழ்ந்திருந்தனன். வர்த்தகன் தன்னறிவின் நுட்பத்தால் பொல்லாத பூதத்தினிடமிருந்து தப்பித்துக் கொண்டது மல்லாமல் அதைக்கொண்டே பெருஞ் செல்வவானுமாயினன். ஆகையால் அறிவினுஞ் சிறந்தபொருள் உலகத்தில் யாதுமில்லை. அறிவினலாகாத காரியமும் திரிலோகத்தும் கிடையாது. ஆகவே அதை அபிவிருத்தி செய்ய ஒவ்வொருவரும் முயல வேண்டும்.

J. V. S.

———:-:———

## Patience and Envy.

### பொறுமையும் பொறாமையும்.

———:(*):———

இவ்வுலகத்திலே மனிதர்களுக்குள்ள குணங்கள் நற்குணங்களெனவும் தீக்குணங்களெனவும் இரண்டு பிரிவினவா யிருக்கின்றன. நற்குணங்களில் முதன்மையானது பொறுமை; தீக்குணங்களில் முதன்மை யானது பொறாமை. பொறுமையாவது தம்மவர் பிறத்தவர் என்று பாராமல் யாவரிடத்திலும் ஒரே கண்ணாய், யார் என்ன தீங்கு செய்தாலும் பொறுத்துக் கொண்டு,

"சாந்தனையுந் தீயனவே செய்திடினுந் தாமவரை
ஆந்தனையுங் காப்ப ரறிவுடையோர்."

என்றபடி தமக்குத் தீங்கு செய்தவரிடத்திலும் நன்மையே செய்யக் கருதுவதாம். இந்தக் குண முடைமையினலேதான் பல புண்ணியவான்கள் மேலோரெனச் சிறப்புற்று "பொறுத்தார் பூமியாள்வார்" என நானிலத்தாரால் நன்கு மதிக்கப் படுகின்றார்கள். பொறாமை அல்லது அழுக்காறுவது தன்னவன் புறத்தவனென்றும் பாராமல் பிறரது செல்வப் பெருக்கு முதலியவற்றைக் கண்ட விடத்து மனம் தாளாமல் "அயல் வாழ்ந்தால் ஐந்துபட்டினி" என்றபடி வருத்தமுற்று அவர்களுக்குத் தீங்கு விளைவிக்கக் கருதுவதாம். பிறர் வாழ்ந்திருக்கப் பார்த்துப் பொறாமைப் படுகின்றவர்களுக்கு இம்மை மறுமை இரண்டிடத்தும் சிறப்பில்லை எனவும், பொறாமைப்படுகின்றவர்களுக்கு கேடு விளைவிக்கத்தக்கது அத் தீக்குணத்தைத்தவிர வேறொன்றும் வேண்டுவதில்லை யெனவும், பிறர் செல்வம் கண்டு பொறாமைப் படுகின்றவனைப் பார்த்து திருமகளும் பொறாமைப் பட்டு அவனை மூதேவிக்குக் காட்டிவிட்டு அப்புறம் நீங்கிப்போவாளெனவும் நாயனர் கூறியிருக்கின்றார்.

"அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான்."
"அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது."
"அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்."

ஆதலால் ஒருவன் தன் மனதின்கண் பொறாமையாகிய குற்றமில்லாத தன்மையையே தனக்கு நல்லொழுக்க வழியாகக்கொள்வானுயின் அவனுக்கு எல்லாச்

சிறப்பும் தர்மமே உண்டாகும். இதற்குத் திருஷ்டாந்தமாய் ஒருகதை உண்டு. அதாவது:—

காஞ்சனபுரம் என்னும் நகரத்தில் அரசுபுரிந்து வந்த மகா தர்மிஷ்டனாகிய தர்மாங்கத னென்னும் அரசன் நூறுபெண்களை மணம்புரிந்துகொண்டான். அவர்களில் கடைசி மனைவி நற்குண நற்செய்கைகளில் முதன்மையாயிருந்ததனால் அரசன் அவளுக்கு குணவதி என்று பெயரிட்டு மற்றவர்களிலும் அவளிடத்தில் மிகுந்த அன்பு பாராட்டி வந்தான்.

வெகுநாள் வரையில் அவ்வரசனுக்கு மக்கட்பேறு உண்டாகவே இல்லை. அதனால் அவன் நன்றாய்ப் பழகின வைத்தியன் ஒருவனை வரவழைத்துத் தன் அபிப்பிராயத்தை அவனுக்குத் தெரிவித்தான். அவ்வைத்தியன் அதுகேட்டுத் தங்கள் மனோரதத்தை நான் பூர்த்தி செய்விக்கிறேன்; கலக்க முறவேண்டாம். எனக்கு ஒரு காட்டாடு மாத்திரம் தருவிக்கவேண்டுமென்று சொல்ல, அரசன் அப்படியே தருவித்தான். வைத்தியன் அதைப் பக்குவப்படுத்தி அதன் மாமிசத்தோடு தன்னிடம் இருந்த ஒருவகை பஸ்மத்தைக் கலந்து மருந்துசெய்துகொண்டு ராஜபத்தினிகளை வரவழைத்தான்.

அச்சமயத்தில் தர்மாங்கதன் தேவ பூஜையிலிருந்தான்; குணவதியும் அரசனுடன் பூஜைசெய்துகொண்டிருந்தாள். அதனால் அவள் அப்பொழுது உடனே வைத்தியனிடம் போக அனுகூலப்படவில்லை. மற்றவர்கள் எல்லாரும் போனார்கள். அவர்கள் வந்ததைப்பார்த்து வைத்தியன் தான் செய்து வைத்திருந்த மருந்தை அவர்களெல்லாருக்கும் கொடுத்துவிட்டான். குணவதிக்காக கொஞ்சமும் மிகுத்திவைக்கவில்லை.

பூஜை முடிந்த உடனே அரசனும் குணவதியும் அவ் வைத்தியனிடம் சென்றார்கள். சென்று நடந்த செய்தியை விசாரித்து அரசன் சந்தோஷமடைந்து குணவதிக்கு ஔஷதம் கொடுக்கும்படி கேட்க, வைத்தியன் தான் மறந்துபோனதைத் தெரிவித்துக்கொள்ளாமலே உடனே உள்ளேபுகுந்து அந்த ஆட்டின் கொம்பைப்பதம் செய்து சூர்ணமாக்கித் தன்னிடம் உள்ள பஸ்மத்தை அதில் கலந்துகொண்டு வந்து குணவதிக்குக் கொடுத்தான். அம்மருந்தின் மகிமையால் நூறு மகிஷிகளும் சீக்கிரமே கருத்தரித்தவர்களாகிப் பத்து மாதத்தில் ஒவ்வொரு புதல்வனைப் பெற்றார்கள்.

அரசன் பிள்ளை பிறந்த செய்திகேட்டு வெகு சந்தோஷமடைந்து மக்களுக்கு சாஸ்திர விதிப்படி ஜாதகரும நாமகரணங்கள் செய்வித்தான். ஆட்டுக்கொம்பின் சூர்ணத்தால் ஜனித்த காரணம்பற்றிக் குணவதியின் புதல்வனுக்கு சிருங்க புஜனென்று பெயரிடப்பட்டது. பிறகு நூறு பிள்ளைகளையும் அரசன் கிரமப்படி போஷித்துத் தக்க காலத்தில் முறைப்படி ஸகலவித்தியைகளையும் போதிப்பித்தான். பிள்ளைகளும் அரசன் மனமகிழும்படி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து ஸகல கலைகளிலும் தேர்ச்சிபெற்று வந்தார்கள்.

அவர்களில் குணவதியின் புதல்வனாகிய சிருங்க புஜன் சிறந்த அழகும் புத்தியும் பலபராக்கிரமமும் உடையவனா யிருந்ததனால் அரசன் அவனிடத்திலும் குணவதியிடத்திலும் அதிகமாய் அன்பு பாராட்டி வந்தான். மற்ற ராஜ மகிஷிகள் இதைப்பார்த்து பொறாமை கொண்டு குணவதியின் மேல் ஏதாவது அபவாதம் சொல்லி அரசனைக்கொண்டே அவளை அகற்றி விடவேண்டும், பிறகு சமயம் பார்த்து சிருங்க புஜனையும் ஓட்டிவிட வேண்டுமென்றும் ஒரே மனதாய் எல்லாரும் யோசித்துக்கொண்டு தகுந்த தருணத்தை எதிர்பார்த்திருந்தார்கள்.

ஒரு நாள் அரசன் குணவதியை விட்டுத் தனியேயிருக்கும் தருணம் பார்த்து முதன் மகிஷியாகிய யசோலேகை என்பவள், அவனிடம் சென்று, பிராணநாதா ஓர் அநியாயம் நடக்கின்றது. அதற்குக் கேள்வியில்லையே! நமது குணவதி நாயகன் தன்மீது அதிகமாய் அன்பு வைத்திருப்பதால் தான் என்ன செய்தாலும் செய்யலாமென்று மிகவும் துணிவுகொண்டு நமது அந்தப்புரக் காவற்காரனாகிய சுமுகனோடு சுகித்துக்கொண்டிருக்கிறாளென்று ஊரெங்கும் பெரிய அபவாதமாயிருக்கிறது.

“வசை யொழிய வாழ்வாரே வாழ்வா
ரிசையொழிய வாழ்வாரே வாழாதவர்.”

ஒருவனுக்கு அபகீர்த்தி உண்டானால் அது அவனுக்கு மரணத்தைவிட அதிகமென்றும், அதனோடு வாழ்கின்ற வாழ்வு வாழ்வேயல்லவென்றும் நீதி நூல்கள் கூறுகின்றன; ஆதலால் இவ்விஷயத்தில் யோசித்துத் தகுந்தபடி நடக்கவேண்டுமென்று தெரிவித்ததோடு தனக்குக் குணவதியின்மீது மிகுந்த அன்பு இருப்பதாகவும் பாவனை செய்து அதற்காகக் கபடமாய் துக்கிக்கவும் துக்கித்தாள். இதைக்கேட்ட

வுடனே அரசனுக்குச் சந்தேகம் உண்டாகிவிட்டது. அரசன் மிக்க புத்திமானாகவும் குணவதியின் சரிதைகள் நன்றாய் தெரிந்தவனாகவும் இருந்தும், யசோலேகையின் வஞ்சனைகள் அவை யாவும் மறந்து போம்படி செய்தன.

உடனே தர்மாங்கதன் சுரக்ஷிதனை வரவழைத்து சுரக்ஷிதா, நீ பிரம்மஹத்தி தோஷம் செய்தாய் அதற்காக நீ கங்கா ஸ்நாநம் செய்து வரவேண்டும் என்று கட்டளையிட்டான். அதைக்கேட்ட சுரக்ஷிதன், தன் மனதில் யாதும் விசற்பமில்லாமையால் முகம் வாடாமலே தங்கள் சித்தம் என் பாக்கியம் என்று கங்கா யாத்திரைக்குப் புறப்பட்டுப்போய் விட்டான். சுரக்ஷிதன் நான் அப்படியாதொன்றும் செய்யவில்லையேயென்று முதலில் மறுதலித்தானாயினும், நீ தீர்த்த யாத்திரை செய்து வருமுன் என் முன்னே நிற்கக்கூடாதென்று நிர்ப்பந்தமாய் சொன்னபடியால் எப்படியாவது அரசன் மனங்கோணாதபடி நடந்துகொள்ள வேண்டுவதே நமது கடமை என்று எண்ணங்கொண்டு சுரக்ஷிதன் யாத்திரைக்குப் புறப்பட்டான். பிறகு அரசன் மனவருத்தத்துடனே குணவதியின் வீட்டிற்குச் சென்றான். வழக்கப்படி அரசனை எதிர்கொள்ளவந்த குணவதி அரசன் முகம்வாடியிருப்பதைக்கண்டு சந்தேகமுற்று, தாங்கள் மனதில் ஏதோ விசாரமுற்றிருப்பதாய்க் காண்கிறதே; அதற்குக் காரணமென்னவென்று அரசனைக்கேட்டாள். அதற்கு அவன், கண்ணே, நான் என்னவென்று சொல்வேன்; இன்று காலை என்னிடம் ஒரு யோகி வந்திருந்தார். இன்று முதல் சிலகாலம் உன்னை பூமிக்குள் சிறை செய்து வைத்து நான் பிரம்மசாரிய விரதம் அனுஷ்டிக்க வேண்டுமென்றும், இல்லாவிட்டால் ராஜ்ஜியம் அழிந்துபோய்விடும் என்றும் முக்காலமுமுணர்ந்த அம்முனிவர் மொழிந்தார். அதைக் கேட்கவே எனக்கு ஆறுதுயரமுண்டாயிற்றென்று கபடமாக மறுமொழி கூறினான்.

அதைக்கேட்ட குணவதியானவள், ஸ்வாமி இவ்விஷயத்தில் தாம் கலக்க முறவேண்டுவதேன்? தமக்கு சுகம் உண்டாகவேண்டியதற்காக நான் எவ்வளவு துயரை அனுபவித்தாலும் அவ்வளவும் எனக்கு சுகமாகவே தோன்றும்; 'குலமகட்கு தெய்வங் கொழுநனே' என நீதிநூல் முறையிடுகின்றதாகையால் கணவன் சுகத்தைத் தருவதே குலமகளுடைய கடமையாம். ஆதலின் என் ஆண்டவனே, தாம் சிறிதும் கலங்காமல் அடியாளை உடனே சிறைசெய்து தமது விரதத்தை நிறைவேற்றிக் கொள்ளுமென்று விடை கொடுத்தாள். குணவதிக்கு இந்த கபடமான சங்கதி யாவும் தெரியாது; பர்த்தாவுக்கு இதனால் சுகம் உண்டாகுமென்று நினைத்துத் தான் சிறை யிருப்பதையும் சுவர்க்கவாசம் செய்வதுபோலக் கருதிக் களிப்புற்றிருந்தாள்.

இந்த சங்கதியைக்கேட்ட சிருங்கபுஜன் தன் தாயாரைச் சிறைசெய்தது யாதகாரணமென்று வினவ, அரசன் குணவதிக்குச் சொன்னதுபோலவே, ராஜ்யத்தை நிலைநிறுத்திக்கொள்வதற்காக வென்று அவனுக்கும் விடைபகர்ந்தான். இவனும் "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்று அதை நம்பியிருந்தான். பிறகு மற்ற ராஜமகிஷிகள் தம் எண்ணங்களில் ஒன்று நைகூடிப் போகவே மற்றொன்றையும் நிறைவேற்றுவதற்கு வேண்டிய முயற்சிசெய்து வந்தார்கள்.

அந்நகரத்துக்கு அருகே பெரிய அரணியம் ஒன்றுண்டு. அங்கே ராக்ஷசன்மாய வடிவங்களையெடுத்துத் திரிவதும் எதிரிட்ட மனிதரைத்தின்று விடுவதுமாக வசித்திருந்தான். சிருங்க புஜனை எப்படியாவது அவ்வரக்கனுக்கு இரையாம்படி செய்துவிட வேண்டுமென ராஜபத்நிகள் தங்கள் பிள்ளைகளுக்கு உபதேசித்து இருந்தனர். அவர்களும் அந்த சந்தோசனைக்கு இசைந்து தருணம் பார்த்திருந்தார்கள். இந்த சங்கதியும் சிருங்க புஜனுக்குத் தெரியாது.

இவ்வாறிருக்கையில் ஒருநாள் பிள்ளைகளெல்லாரும் ஒரு பூந்தோட்டத்தில் விளையாடிக் கொண்டிருந்தனர். அத்தருணத்தில் அவ்வரக்கன் அன்றிற் பட்சிவை வடிவெடுத்து அருகே இருந்த பாறையின்மேல் வந்து உட்கார்ந்தான். சிருங்கபுஜன் தவிர மற்றவர்கள் கையில் அம்பும் வில்லும் வைத்திருந்ததனால் ஒவ்வொருவரும் அதை அடிக்க முயன்றார்கள்; ஒருவனுடைய பாணமாவது அவன் கிட்டகூடப்போகவேயில்லை அதுகண்டு அவ்விடம் இருந்த ஓர் தவசி, உங்களால் இதைஅடிக்க முடியாது, சிருங்கபுஜன் ஒருவனாலேதான் முடியும் என்று சொல்லி உற்சாகப் படுத்தினான். சிருங்கபுஜன் கையிலோ ஆயுதமில்லை. அது தெரிந்து அப்பிள்ளைகளில் ஒருவன் வீட்டிற்கு ஓடித் தங்கள் தந்தையின் பொன் வில்லையும், பொன் அம்பையும் கொண்டுவந்து சிருங்கபுஜன் கையில் கொடுத்தான். அது தன் தகப்பனுருடையதென்று தெரிந்திருந்தும் அந்தப் பக்ஷியை அடித்

துக் கொன்றுவிட்டு மறுபடி வில்லை இருப்பிடம் கொண்டு சேர்க்கலாமென்று கருதி, சிருங்கபுஜன் சரியாக குறிபார்த்து அந்த அம்பை அப்பறவையின் மேல் எய்தான். அந்த அம்பு அவ்வன்றிற் புள்ளின் மேல் பொத்துக்கொண்டது. உடனே அது அந்த பாணத்துடனே பறந்து போயிற்று.

ராஜபுத்திரர்கள் அதுகண்டு, சிருங்கபுஜா, நமது தந்தையின் பொன்னம்பு போய்விட்டது. தெரிந்தால் தந்தை கோபங்கொண்டு எங்களை துரத்திவிடுவார். ஆதலால் நீ அதை எப்படியாவது கொண்டுவந்து கொடுக்கவேண்டும்; கொடாவிட்டால் நாங்கள் இந்த கிணற்றில் விழுந்து பிராணனை விட்டுவிடுவோமென்று பிடிவாதம் செய்தார்கள். சிருங்கபுஜன் அது மெய்யென்று நம்பி நீங்கள் பயப்படவேண்டாம்; அப்படியே தேடிக் கொண்டுவந்து கொடுக்கிறேன் என்று அவர்களுக்கு தைரியம் சொல்லி, வில்லும் அம்பும் கையிலேந்திப் புறப்பட்டு அப்பக்ஷியைத் தேடிக் கொண்டு அதன் உதிரம் பெருகிக்கொண்டு போன வழியே சென்றான். ராஜபுத்திரர்கள் இச்செய்தியை தங்கள் தாய்மாருக்கு அறிவித்து அவர்களை மகிழச் செய்தார்கள்.

அவ்வரக்கனைத் தேடிக்கொண்டு போன சிருங்கபுஜன் கதி என்னவாயிற்று என்பீர்களோ? அவன் உதிரம் சிந்திய வழியையே தொடர்ந்து சென்று ஒரு பெரிய காட்டில் வந்து சேர்ந்தான். அவ்விடத்தில் ஒரு அழகிய அரண்மனையும் உத்தியானவனமும் தென்பட்டன. பின்பு வழியில் உதிரம் தென்படவில்லை. அதனாலும் வெகுதூரம் நடந்துவந்த களைப்பினாலும் அந்த சிங்கார வனத்திலுள்ள குளக்கரையில் அவன் சற்றே இளைப்பாற உட்கார்ந்தான். அப்பொழுது ரூபசிகை என்னும் பெண்மணி அந்த தோட்டத்திற்கு வந்தாள். அவள் இவன் அழகைப்பார்த்து மோகித்து இவனை விவாகம்செய்து கொள்ளவேண்டுமென்று மனதில் நிச்சயித்துக்கொண்டு இவனிடம் வந்து இவன் வரலாற்றை விசாரிக்க, சிருங்கபுஜன் தன் விருத்தாந்தங்களை ஆதியோடு அந்தமாகச் சொல்லி முடித்தான்.

அதைக்கேட்ட ரூபசிகை மிகவும் இரக்கமும் ஆச்சரியமும் கொண்டு ராஜகுமாரா நீர் அடித்த பறவை மற்றப் பறவைகளைப் போன்றதல்ல. அது ஒரு அரக்கன்; என் தகப்பன்; அவன் பெயர் அக்கினிசிகன். அவனை வெல்ல யாராலும் முடியாது; நீர் அவனை அடித்தது வெகு ஆச்சரியம்; உம்முடைய அம்பு இவ்விடத்திலேதான் இருக்கிறது; நான் உம்மைக் கண்டவுடனேயே உம்மையே எனக்குக் கணவனாக வரித்துவிட்டேன். நீர் இன்னும் சற்றுநேரம் இங்கேயே இருக்கவேண்டும், நான் என் தகப்பனார் அனுமதி பெற்றுவந்து உம்மை அழைத்துக்கொண்டு போகிறேனென்று சொல்லி, அவனைக் குளக்கரையிலேயே இருக்கச் செய்து தன் தகப்பனாரிடம் சென்று அந்த ராஜகுமாரனது வரலாற்றையும் பராக்கிரமத்தையும் அவனிடம் தெரிவித்து "அப்பா நான் அவ்வழகனைக் கண்டவுடனே எனக்கு மணவாளனாக மனதில் வரித்துவிட்டேன். நீர் என்னை அவனுக்கு விவாகம் செய்துகொடுக்கவேண்டும். இல்லாத பக்ஷத்தில் நான் பிராணனை விட்டுவிடுவேன்." என்று உறுதியாகச் சொன்னாள். அக்கினிசிகன், பெண்ணின் நிர்ப்பந்தம் பொறுக்க மாட்டாமல் வேண்டா வெறுப்பாகவே அவனை அழைத்துவர அனுமதி கொடுத்தான். அதைக்கேட்ட ரூபசிகை தன் மனோரதம் நிறைவேறிற்றென்று மிக்க மகிழ்ச்சிகொண்டு உடனே சென்று சிருங்கபுஜனை அழைத்துவந்தாள். அவனைப்பார்த்த உடனே அக்கினிசிகன் "சிருங்கபுஜா நான் சொன்னதையெல்லாம் செய்ய உனக்கு சம்மதமானால் ரூபசிகையை நீ விவாகம் செய்துகொள்ளலாம்" என சிருங்கபுஜன் அப்படியே என்று அதற்குச் சம்மதித்தான். உடனே ஸ்நானம் செய்துவரும்படி சிருங்க புஜனுக்கு சட்டளையிட்டு, தன் மற்றப்பெண்களை அழைத்து வரும்படி அவன் ரூபசிகைக்கு உத்தரவு செய்தான். இதோ அழைத்து வருகிறேன் என்று சொல்லிப்போன ரூபசிகை சிருங்கபுஜனிடம் சென்று, என் உயிர்த்தோழனே, என்னுடன் பிறந்தவர்கள் தொண்ணூற்றென்பது பெயர் உண்டு. நாங்கள் எல்லோரும் ஒரே விதமான அழகும் ஆடை ஆபரணமும் உள்ளவர்களாய் இருப்போம். யாவரையும் வரிசையாக நிற்கவைத்து அவர்கள் நடுவிலிருந்து என்னை தெரிந்தெடுக்கும்படி என் தகப்பனார் உமக்குக் கட்டளையிடுவார். அப்போது நீர் மயங்கவேண்டாம். நான் என் மணிவடத்தைத் தலையில் வைத்துக்கொண்டிருக்கிறேன். அதைக் குறிப்பாய்ப் பார்த்து என்னைத் தெரிந்துகொள்ள வேண்டும். இல்லாவிட்டால் காரியம் கைகூடி வராது என்று தெரிவித்துவிட்டு வீட்டுக்குப்போய்த் தன் தமக்கைமாரை அழைத்து வந்தான். அவர்கள் நூறு பேரும் மண்டபத்தில் வந்து உட்கார்ந்தார்கள்.

சிருங்கபுஜன் நீராடிவந்த வுடனே அவன் கையில் ஒரு பூமாலையைக்கொடுத்து, நீ உன் கருத்துக்கிசைந்தவள் கழுத்திலே இந்தப் பூமாலையைப் போடென்று அக்கினிசிகன் ஆக்கியாபித்தான்.

சிருங்கபுஜன் அம்மாலையைக் கையில் எடுத்துக்கொண்டு ரூபசிகை சொல்லியிருந்த சங்கேதப்படி அவளைத் தெரிந்தெடுத்து. அவள் கழுத்தில் மாலையை அணிந்தான். அக்கினிசிகன் அதுகண்டு ஆச்சரியப்பட்டு, மறுநாள் விவாகம் நடத்துவதாய்ச் சொல்லி எல்லோரையும் அந்தப்புரம் போய்ச்சேரும்படி உத்தரவு செய்தான்.

ரூபசிகை மாத்திரம் சிருங்கபுஜனோடு கூடவே இருந்தாள். அப்பொழுது அவள் அவனை நோக்கி, நண்பனே, என்பிதா மகா மூடன். அவருக்குத் தாம் அஞ்ச வேண்டாம். என்ன காரியம் செய்யும்படி தமக்கு கட்டளையிட்டாலும் ஆகட்டுமென்று ஒப்புக்கொண்டு என்னிடம் வந்தால் நான் முடித்துக்கொடுக்கிறேன் என்று சொல்லி வைத்தாள்.

அந்தப்புரம் போம்படி சொன்ன அரைநாழிகைக்குள் அக்கினிசிகன் மறுபடி சிருங்கபுஜனை அழைத்து அருகிலுள்ள வயல்களை உழுது எழுகலம் எள்ளை விதைத்துவிட்டு உடனே வரும்படி கட்டளையிட்டான். அதுகேட்டு இந்தக் காரியம் எவ்வாறு செய்து முடிக்கக் கூடுமென்று சிருங்கபுஜன் மனம் சலித்துக்கொண்டே ரூபசிகையிடம் சென்று அச்செய்தியைத் தெரிவிக்க அவள் தன்மாயையின் வல்லமையினால் அவன் சொன்னபடியே நன்றாய் உழுது விதைப்பித்து, சிருங்கபுஜனை தன் தகப்பனிடம் அனுப்பினாள். அவன் அப்படியே சென்று காரியம் செய்தாயிற்று என்று அக்கினிசிகனுக்குத் தெரிவிக்க, அரக்கன், ஓகோ இவன் வல்லமையில் நம்மை மிஞ்சியிருக்கிறானே என்று வியந்து அந்த விதைகளையெல்லாம் மறுபடி சேகரித்துக்கொண்டுவா என்று கட்டளையிட்டான். அதையும் ரூபசிகை தன் மாயையினால் அவனுக்குச் செய்து முடித்துக்கொடுத்து மனமகிழச் செய்தாள்.

அதைக்கண்டு அக்கினிசிகன் மனமகிழ்ந்தானாயினும் சாதாரணமான ஒரு மனிதனுக்கு தன் அருமை மகளை விவாகம்செய்து கொடுக்க அவனுக்கு மனமில்லை. அதனால் அவனை வெல்லும்படி மற்றொரு போக்கு சொல்லி அனுப்பினான். ஆயினும், ரூபசிகை அவனையே விவாகம் செய்துகொள்ள வேண்டுமென்று உறுதிகொண்டிருந்ததினால் அதையெல்லாம் அவள் நிறைவேற்றி விட்டாள். அவ்வளவோடு விடாமல் அக்கினிசிகன் மறுபடியும் சிருங்கபுஜனை அழைத்து இங்கிருந்து இரண்டு யோஜனை தூரத்துக் கப்பால் ஒரு பெருங்காட்டில் சிவாலயம் ஒன்றிருக்கின்றது. அங்கே என் தம்பி தூமசிகனென்ற ஒருவன் இருக்கிறான். நீ அவனிடம் சென்று நாளை விவாகமென்று தெரிவித்து ஒருமணி நேரத்தில் வாவென்று கட்டளையிட்டான்.

(இன்னும் வரும்.)

———:-:———

## THE CONSTITUTION OF MAN.

### மனிதன் அமைப்பு.

மனிதன் புருஷனென்று சொல்லப்படுகிறான். இவன் மிருத்ய (நசிப்பதும்) அம்ருத்ய (நசிக்காததுமான) சுபாவங்கள் இரண்டுடையவன். டகவத்கீதையின் 15-வது அத்யாயத்தில் நசித்துப்போகும் பாகம் க்ஷரம் என்றும், நசித்துப்போகாதது அக்ஷரம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த க்ஷர பாகமே அக்ஷரபாகத்துக்கு இருப்பிடமாக விருக்கிறது. ஒவ்வொரு மனிதனுக்கும் அவன் தேஹம் உண்டாகும்போது அவன் ஜீவன் சிருஷ்டிக்கப்படவில்லை. இந்த ஜீவன் புருஷோத்தமனாகிற பரமாத்மாவின் அம்சமே. இது ஒவ்வொரு புருஷனுடனும் சிருஷ்டிக்கப்படும்காலத்தில் சிருஷ்டிகர்த்தாவுடைய புத்தி சிந்தனைக்குட்படும். புனர்ஜன்மம் உண்டென்னும் மதம் தற்கால சிருஷ்டிக்கு விரோதமாகவிருக்கிறது. கர்ப்பாரம்பம்முதல் பிரளயம் வரையிலிருக்கிற புருஷன் மேற் சொல்லிய அக்ஷர புருஷன்: இவன் மானசிக புத்திரன், க்ஷேத்ரஜ்ஞன். குப்த வித்தியாசாஸ்திரப்படி பிரகிருதி புருஷசம்பந்தத்தா லுண்டாகியும் வெவ்வேறு விசேஷங்களோடு கூடிய 7-பூமிகைகளை யுடைத்தாயிருக்கிற ப்ரஹ்மாண்டம்போல பிண்டாண்டமாகிறது மனிதனிடத்திலும் 7-தத்துவங்க

யிருக்கின்றன. பிரஹ்மாண்டத்தின் பூமிகைகளும் பிண்டாண்டத்தின் தத்துவங்களும் முறையே சம்பந்தப்பட்டிருப்பதை இனிமேல் காண்பிக்கப்படும். இந்த 7-தத்துவங்களில் சில எல்லாரிடத்திலும் மற்றவை சிலரிடத்தில் மட்டும் பக்குவமாகி வெளிப்பட்டிருக்கின்றன. எந்தெந்த அம்சங்கள் வெளியாயிருக்கின்றனவோ அந்தந்த அம்சங்களில் மனிதனுடைய பிரஜ்ஞை விளங்கும். இவைகளுக்கு ஸாதிருசியமான பிரஹ்மாண்டத்தின் தத்துவங்களையும் அவன் அறியக்கூடும். இந்த ஏழுதத்துவங்களும் ப்ரஜ்ஞாபேதங்களே. ஒவ்வொருவித பிரஜ்ஞையும் ஒவ்வொரு பூமிகையில் வியவஹரிக்கிறது. ஸ்தூல பூமிகையில் ஸ்தூல ப்ரஹ்மாண்டம் அறியப்படுகிறது. எல்லாத் தத்துவங்களையும் பக்குவப்படுத்தினவர்கள் பிரஹ்மாண்டத்தில் சகல ரகஸியங்களையும் அறிவார்கள்.

பிரஜ்ஞை வெவ்வேறு விதமாக விருக்குமென்பதற்கு உதாஹரணம்:—

பசி தாஹங்களை யுணர்ந்து, அடிகாயம் முதலியவைகளை உணரும்போது ஸ்தூலசரீரமாகிற ஸ்தூல தத்துவத்தில் மனிதனுடைய ப்ரஜ்ஞை விளங்குகிறது. யுத்தகளத்தில் அவனிருக்கும்போது சரீரத்தைமறந்து தன்பிரஜ்ஞையை மனோவிசார பூமிகையில் அவன் கிறுத்துகிறான். ஆகையால் காயத்தால் ஸ்தூலசரீரத்துக்குண்டாகும் வருத்தத்தை அவன் அறிகிறதில்லை. யுத்தமுடிந்தபின் அவனுடைய பிரஜ்ஞை ஸ்தூலசரீரத்துக்குத் திரும்பிவந்து வலியை அறிகிறது. ஒருவன் ஏகாக்ரசித்தத்துடன் தத்துவவிசாரம் செய்துகொண்டிருக்கையில் பசிதாஹம் முதலியவைகளையும், விருப்பு வெறுப்புகளையும், மான அவமானங்களையும் இன்னுமிவைபோன்ற மற்ற மனோவிகாரங்களையும் பூர்ணமாக மறந்து விடுகிறான். அவன்மனது அக்காலத்தில் ஆலோசனையாகிற பூமிகையில் பற்றுதலையடைந்து விளங்குகிறது. இவ்விதமாக மனிதன் வெவ்வேறு ஸ்திதியிலிருந்துகொண்டு மற்றவைகளை மறந்துவிடக்கூடும். காமம், குரோதம், வித்யாப்பியாஸம், தத்துவவிசாரம் முதலிய இவைகள் பலமாயிருக்கும்பொழுது அவைகளில் தற்பரனை ஒரேமனிதன் வெவ்வேறுவிதமாகக்காணப்படுகிறான். நம்முடைய பிரஜ்ஞையிலுண்டாகும் ஒவ்வொரு வித்யாஸமும் நம்மை வெவ்வேறாகக் காண்பிப்பதால் ஒவ்வொரு பேதத்துக்கும் தனித்தனியே பேர் கொடுக்கும்படி நேரிடுகிறது. மனிதனுடைய தத்துவங்களை விசாரிப்பதால் அவன் இப்படிப் பட்டவன், அவனுடைய சக்திகள், அவைகளால் நடக்கும் சாமார்த்தியமானவை, இவைகளெல்லாம் நன்றாய்விளங்கும் அவனைப் பிரித்தறியாவிட்டால் இவைகள் நன்றாய் விளங்கமாட்டா.

மனிதனுடைய ஏழுதத்துவங்களாவன:—

(1) ஸ்தூலசரீரம்; (2) லிங்கசரீரம்; (3) பிராணன்; (4) காமம்; (5) மனஸ்; (6) புத்தி; (7) ஆத்மா.

தாரகராஜயோகத்தின்படி இவ்வேழு அம்சங்களை:—

(1) ஸ்தூலஉபாதி; (2) சூக்ஷ்மஉபாதி; (3) காரணஉபாதி; (4) ஆத்மா என நாலுவிதமாய்ப் பிரிக்கலாம்.

இவைகளையே ஐந்து கோசங்களாகவும் பிரிக்கலாம்.

அடியில்கண்ட பதகம் இந்த பலவியாபகங்களை விளக்கும்:—

| குப்த வித்தையின்படி தத்துவங்கள். | வேதாந்தத்தின்படி கோசங்கள். | தாரகராஜயோகத்தின்படி உபாதிகள். |
|---|---|---|
| 1 ஸ்தூலசரீரம். | 1 அன்னமய [கோசம் | 1 ஸ்தூலஉபாதி |
| 2 லிங்கசரீரம். | 2 பிராணமய [கோசம் | 2 சூக்ஷ்மஉபாதி |
| 3 பிராணன். | | |
| 4 காமம். | 3 மனோமயகோ[சம் | 3 காரணஉபாதி |
| 5 மனது-அசுத்[தம், சுத்தம். | 4 விஞ்ஞானமய [கோசம் | 4 ஆத்மா. |
| 6 புத்தி. | 5 ஆனந்தமய [கோசம் | |
| 7 ஆத்மா. | 6 ஆத்மா. | |

குறிப்பு.—மேற்கண்ட ஏழு அம்சங்களில் முதல் நாலும், நசித்துப் போவதாலும் மற்ற மூன்றும் நாசமடையாதிருப்பதாலும் இவை க்ஷரம், அக்ஷரம் என இரண்டுவிதமாகப் பிரிக்கப் படுகிறது.

ஒரு மாலையின் பலமணிகளில் நாலு நுழையும் நூல் ஒன்றாக விருப்பதுபோல அனேக ஜன்மங்களில் சம்பந்தப்படுவது ஆத்மா புத்தி மனதே. இவையே க்ஷேத்ரஜ்ஞன், பரமார்த்திக ஜீவன், கூடஸ்தன் எனப்படும். மற்ற நான்கும் ஸ்தூல சரீரத்தின் மரண முதல் நாளாவர்த்தியில் நசித்துப்போய் வேறு சரீரங்களின் உற்பத்திக்கு உபயோகப் படுகின்றன. C. V. S.

மு. மீ. நாராயணய்யர்.

———:(*):———

## Easy Lessons in Economics.

### Lesson XII.

### குடிவாழ்க்கை.

### 12-ம் பாடம்.

———:(o):———

பலர் கூடி கைத்தொழிலை உண்டாக்குதல்.

பஞ்சு இங்கிலாண்டு போன்ற குளிர்ச்சியான தேசத்தில் பயிராகாது. நமது தேசத்திலிருந்து இங்கிலாண்டுக்கு பிரதி வருஷமும் சுமார் பன்னிரண்டு கோடி ரூபாய் மதிப்புள்ள பஞ்சு ஏற்றுமதி செய்யப்படுகிறது. இதை அவர்கள் நூலாகவும் துணியாகவும் செய்து இவ்விடத்திற்கே அனுப்பி முப்பத்தாறு கோடி ரூபாய் பெறுகிறார்கள். அந்த இலாபத்தால் கோடிக்கணக்கான ஜனங்கள் ஜீவனம் செய்கிறார்கள். அந்தப் பஞ்சை நாம் அவ்விடத்திற்கு அனுப்பாமல் நாமே வைத்துக்கொண்டு நூல் நூற்றும், வஸ்திரங்களை நெய்தும், பிரதேசங்களிலிருந்து வரும் துணிகளை வாங்காமல் கட்டுப்பாடு செய்தும் வருவோமானால், நெய்தற்றொழில் செய்வோரும் மற்று அநேகரும் ஜீவனத்திற்கு இவ்வளவு சிரமப்படவேண்டி யிராததுடன், வயிற்றுச் சோற்றுக்காக இந்துக்கள் அந்நிய நாடுகளுக்கு கப்பல் கப்பலாகச் செல்வதும், புறமதப் பிரியமுள்ளவர்களாய் ஜாதியைக் கெடுத்து கொள்ளுவதும் அநேகமாய் நின்றே போகும்.

வேண்டிய கைமுதலும் ஒருமைப்பாடு மில்லாமையால், நம்முடைய கையிலிருக்கும் பஞ்சைப் பிறருக்குக் கொடுத்து, அவர்கள் இலாபமடைவதை நாம் கண்ணாலே பார்த்துக்கொண்டிருக்கின்றோம். பஞ்சு நம் கையிலிருந்தும், நம்முடைய கை யந்திரங்களாலும் தறியாலும், செய்யப்படுகிற துணிகளை விட ஆங்கிலேயத் தொழிலாளிகள் தங்களால் செய்யப்படுகிற துணிகளை குறைந்த விலைக்கு விற்பதற்குக் காரணங்கள் பல. தீ யந்திரங்களைக்கொண்டு நூல் நூற்கும் தொழிலையும் நெசவு வேலையையும் நடத்துவது அக்காரணங்களில் முக்கியமானது.

நாம் ஒன்று சேர்ந்து, நம்மில் சிலரை பம்பாய் முதலிய விடங்களில் தீயந்திரங்களின் உதவியால் நெசவுத்தொழில் செய்யும் சாலைகளுக்கு அனுப்பி அங்கு நடக்கும் நெசவு மார்க்கங்களை அப்பியசிக்கும்படி செய்ய வேண்டும். தவிர இங்கிலாந்து போன்ற தேசங்களுக்கும் சிலரையனுப்பி அவ்விடத்தில் நடக்கும் நெசவு மாதிரிகளைக் கற்றுவரும்படி செய்யவேண்டும். அப்படிக் கற்று வந்தவர்களைக்கொண்டு, நமது தேசத்திற்கும், செய்யப்பட வேண்டிய துணிகளுக்குத் தக்கவாறும் யந்திரங்களை மாற்றியும், குறைத்தும், சேர்த்தும் துணிகள் செய்ய முயற்சிசெய்ய வேண்டும். திருநெல்வேலி, மதுரை, தஞ்சாவூர், செங்கற்பட்டு, சேலம், கோயமுத்தூர் முதலிய சில தமிழ் ஜில்லாக்களில் மட்டும் சுமார் ஒரு லக்ஷம் தறிகளுக்குக் குறை

யாமலிருக்குமென்று நம்பலாம். நாட்டு வஸ்திரங்கள் சற்று உறப்பாயிருக்கிறதென்ற நம்பிக்கையினாலும், பட்டும் சரிகையும் சேர்ந்து நெய்த வஸ்திரங்கள் இன்னும் நம்முடைய மனதிற்கிசைந்தபடி இங்கிலாண்டிலிருந்து வராததாலும், நம்முடைய ஸ்திரீகள் உடுக்கும் சேலைகள் மாதிரி நெய்ய இங்கிலாண்டில் இன்னும் ஏற்பாடு செய்யப்படாததாலும், நம் தேசத்தில் அங்கங்கு பலர் நெய்யும் தொழிலை மேற்கொண்டு ஜீவிக்கின்றனர். இராஜாங்கத்தார் இவ்விஷயத்தில் பேருதவி செய்யலாம். அதாவது இந்துக்களுடைய கைத்தொழில் விருத்தியடைய வேண்டுமென்றும், அவர்களும் மற்ற நாகரீகமடைந்த தேசத்தார்கள் போல் முன்னுக்கு வரவேண்டுமென்றும் உண்மையான கருத்துக் கொண்டவர்களாயிருந்தால் அந்நிய தேசங்களிலிருந்து இந்திய துறைமுகங்களில் வந்து இறக்கப்படுகிற பருத்தி நூல் துணிகளின் பேரில் சற்று கடூரமாய் வரி விதிக்கலாம். அப்படி விதித்தால் அந்நியநாட்டுத்துணிகளுக்கு சற்று விலையேறுவதால் சுதேசதுணிகளுக்கு நல்லகிராக்கி யுண்டாகவே, சுதேசகைத்தொழில் விருத்தியடைந்து கைத்தொழிலாளிகள் சற்று தெம்புடையவராவார்கள். ஆனால் அவர்கள் அவ்விதவுதவிசெய்யமாட்டார்களென்றே நம்பவேண்டியிருக்கிறது. இங்கிலாண்டு தேசத்துத்துணி வியாபாரிகளுடைய மனம் வருந்தாமலிருக்கும் பொருட்டு, இத்தேச நெசவுத்தொழிலையே நிறுத்தவேண்டி வந்தாலும் நிறுத்துவார்களேயன்றி அவ்வியாபாரிகளுடைய விரோதத்தை சம்பாதிக்கத்துணியாரென்பது சிலர்மதம்.

ஆகையால் இவ்விஷயத்தில் நாமே முற்பட்டு நம்முடைய தொழில் செழிக்கவும், இலாபத்தைப்பெறவும் பார்த்துக்கொள்ளவேண்டும். பம்பாயிலும் சென்னையிலும் பல ஐரோப்பியர்களும், சில சுவதேசிகளும் பஞ்சு நெசவுசாலைகளை ஏற்படுத்தி தொழிலை செவ்வையாக நடத்தி வருகின்றனர். இவ்விடங்களிலும் அங்கிலேயரே பெரும் இலாபம் கிடைக்கும்படியான ஒவ்வொரு தொழிலையும் கைப்பற்றி இலாபத்தையடைந்து இங்கிலாண்டின் செல்வத்தை விருத்திசெய்து வருகின்றனர். சுவதேசிகளில் தனவான்களாயுள்ளவர்கள் இவ்விஷயத்தையும் இது போன்ற கைத்தொழில் விஷயங்களையும் கவனித்து பெருமுதலைச்சேர்த்துத் தகுந்த தொழிற்சாலைகளை ஏற்படுத்தி நம்முடையதேசத்தில் வயிற்றுச்சோற்றுக்குவருந்தி க்ஷீணிக்கும் தொழிலாளிகளைக் காப்பாற்றி தங்கள் தனத்தையும் பெருக்கி தேசத்திற்கும் நன்மை விளைவிக்க முன்வரவேண்டும். அங்கங்கு சிலருக்கு இவ்வித நினைவுண்டாயிருப்பதுண்மையே. ஆயினும், பல செல்வவான்கள் தங்களுடைய கடமை இவ்வகைப்பட்டதென்று இன்னுமறியவில்லையென்றே கருதவேண்டியிருக்கிறது. பரோபகாரத்தால் விளையும் சுகத்தையும், அவ்வுபகாரத்தை யடையும் ஜனங்களின் ஹிருதயக்கமலத்திருந்து வரும் புகழ்ச்சியே தனக்குப் பேரின்பத்தை யளிக்கும் என்கிற நம்பிக்கையும் கருதி, ஸ்வகாரியத்தை சிலகாலம் மறந்தாலொழிய இவ்வுலகத்தின் சிற்றின்பங்கள்கூட மனிதனுக்கு உருசிகெட்டு கிடக்கும். ஆகையால் தங்களுக்கு இலாபத்தையும் தேசத்திற்கு நன்மையையும் விளைவிப்பதாகிய கைத்தொழில் விஷயங்களில் பெருத்த செல்வம் படைத்தவர் துணிந்து மனம் வைத்தாலொழிய நம்முடையதேசம் சீக்கிரத்தில் முன்னுக்கு வராது.

கைத்தொழில்களில்.—நூல், துணிசெய்தல், காகிதம்செய்தல், கம்பளி, பட்டு முதலியவைகளை நெய்தல், நூல்பென்சல், பேனா, மைசெய்தல், மெழுகுவர்த்தி, சவர்க்காரம் செய்தல், பிஸ்கோத், கட்டிப்பால் முதலியவைகளை யுண்டாக்குதல், பலவித எண்ணெய்கள் செய்தல், தீப்பெட்டிகள் செய்தல், பலவிதநார், கோரைப்புல், ஓலை முதலியவைகளால் பாய், கயிறு, படுதாமுதலியவைகள் செய்தல், சர்க்கரை, கற்கண்டு

முதலிய எவ்வளவோ சிறந்த தொழில்களி ருக்கின்றன. எத்தொழிலைச்செய்தாலும், நாண யமும், ஒற்றுமையும், பரோபகாரசிந்தையு மிரு க்க வேண்டும். ஜோடு, செருப்பு முதலியவை களைசெய்யும் தொழிலாளியும் மேற்கண்டகுண ங்களை யுடையவனுயிருந்தால் தகுந்த இலாபம டைவதுடன் ஒவ்வொருவராலும் கௌரவமாக வே மதிக்கப்படுகிறான். ஆகையால் எந்தத் தொழிலும் ஈனமில்லை என்றே கருதவேண்டும்.

T. C. வேங்கடரமணய்யர்.

—:o:—

## Historical Selections.

### The Romance of a Vanquished King.

### சரித்திர விலாவஸம்.

—ஃ(*)ஃ—

ஜயிக்கப்பட்டு ராஜ்யத்தை விட்டோடின ஒரு மோகலாய ராஜன் கதை.

(148-ம் பக்கத்தொடர்ச்சி).

உமாயூன் சக்கரவர்த்தி பகைவரால் ராஜ்யத் தினின்றும் துரத்தப்பட்டு ஓடிப்போய் வழி யிலே ஒரு பள்ளன் வீட்டில் தங்கி யிருந்து அப்புறம்போய் விட்டானென்று சொன்னோ மல்லவா? அது முதல் அந்த பள்ளனுடைய குடும்பம் செல்வமும் சாய்காலுமாய் விருத்தி யடையத் தலைப்பட்டது. உமாயூன் கொடுத்து விட்டுப்போன பொருளைக்கொண்டு பள்ளன் வேண்டிய ஆடுமாடுகள் வாங்கி விற்றுச் சில நாளைக்குள்ளே அவன் கொடுத்த இரண்டாயி ரம், ரூபாயை மேன் மேலும் விருத்தி பண்ணி விசேஷ தனவானுயினன்.

அவனுடைய மூத்த மகள் சிறு பிராயத்தில் காணப்பட்டது போலவே நல்ல பருவத்தில் யாவரும் பார்த்து வியக்கத்தக்க சிறந்த வடி வழகோடும் பெருமை பெற்ற பெண்மணி யாயினள். ஆயினும் அவளுக்கு உடனே கலி யாணமாக வில்லை, பள்ளன் பெண்ணை உயர் ந்த ஜாதியிற் பிறந்த எவன் கலியாணஞ் செய்து கொள்வான்? சுப ஜாதியிற் கலியாணஞ்செய்து கொள்ள அவளுக்கு சிறிதும் விருப்பமில்லை. அவர்களுடையஏழமையையும் ஜாதித்தாழ்வினு லுண்டான இகழ்ச்சியையும் கண்டு அந்த ஜாதி யார் எல்லோரிடத்திலும் அவளுக்கு வெறுப்பு உண்டாயிற்று. அவர்களிடத்தில் ஆசை கொள் ளும்படி அவள் தன் மனதை வேண்டுமென்று எவ்வளவுதான் திருப்பினும் அது திரும்ப வில்லை. அது கண்டு அந்தப்பெண் கலியாண மில்லாமல் ஆயுளளவும் இப்படியே துக்கப்பட வேண்டுவது தான் நம்முடைய தலைவிதி யென் றெண்ணி, அதைப் பற்றி எப்பொழுதும் மன தில் கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள்.

தன் பெண்ணினுடைய பரிதாபத்தைப் பார் த்து அந்தப் பள்ளனுக்கும் அதிக விசன முண் டாயிற்று. ஆயினும் அதைத் தீர்க்க அவனால் ஆகவில்லை. அந்த நிலையைப் பார்த்து, அவன், இவ்வுலக வாழ்க்கை எப்பொழுதும் எப்படிப் பட்டவனுக்கும் மேன்மேலும் துக்கங்களையே தருகிறதென்றும், தன் இனத்தாருக்குள்ளே தான் கொஞ்சம் பெருமை பெறும்படி அப்பொ ழுது தனக்கு உண்டான கொஞ்சம் பாக்கியமே இன்னும் எவ்வளவு சங்கடங்களுக்கெல்லாம் இடமான இப்படிப்பட்ட துக்கத்தைத் தந்த தென்றும் கண்டுகொண்டான். ஒருவன் எவ்வ ளவு ஏழமையான நிலையிலிருக்கிறானோ, அவ்வ ளவுக் கவ்வளவு நலம்: அந்தஸ்து உயர உயர, சங்கடங்களும் மனவருத்தங்களுமே அதிகமா கின்றன வென்றும் அவனுக்குத் தெளிவாய் தெரிந்தது. இப்பொழுது அவன் தனிகனானது உண்மையே; ஆயினும் அந்தச் செல்வம் இன த்தாரினின்றும் அவன் அந்தஸ்தை மிகவும் உய ர்த்தி, அவனைத் தனியே வாழச் செய்தது; அப்படியே அவன் மகளையும் தனியாக்கி அவள் இவ்வுலக வின்பம் ஒன்றையும் அனுபவிக்க வொட்டாமற் செய்தது. அவன் எவ்வளவு சீத னங் கொடுத்துத் தன் மகளை கட்டிகொடுக்கத்

தணிந்தாலும் பள்ளன் மகளை உயர் குலத்தார் ஒருவரும்வந்து கைப்பிடியார்கள். அந்தப்பெண் தன் மனதிற் கொண்ட ஒருவிதமான அகமதிப்பை விட்டாலொழிய அவளுக்குச் சுயஜாதியிலும் விவாக மாவதற்கில்லை.

அநேகம் பள்ளர்கள் மோகன மென்னும் அந்தப் பெண்ணைக் கலியாணஞ் செய்துக்கொள்ள ஆசைகொண்டு அடிக்கடி வந்து மன்றாடினார்கள். ஆயினும் அவள் அவர்களுடைய நிலையைப் பார்த்துப் பரிதாபப் பட்டாளே ஒழிய ஒருவரிடத்திலாவது மனம் இரங்கவில்லை. இப்படியாக அவள் தனித்தே காலம் கழிக்கும்படியாயிற்று. நீ ஒருவரும் வேண்டாமென்று விலக்கி விடுகிருயே, ஆனல் நீ கலியாணமே இல்லாமல் கன்னிகையாகவேதான் காலங்கழிக்கப் போகிருயோ வென்று யாராவது வந்து கேட்டால் அதற்கு அவள் அப்படியில்லை; நான் என்ன செய்வேன்; ஒருவரிடத்திலாவது என் மனம் பதியவில்லையே; யாரிடத்தில் என் மனம் பற்றுகிறதோ அவருக்கு மணமாலை சூட்ட ஆவலுடனே காத்திருக்கிறேன் என்று பதிலுரைப்பாள். ஆயினும் ஒருவரிடத்திலாயினும் அவள் மனம் பற்றவில்லை. அவளுக்கு கலியாணம் ஆகவுமில்லை.

இப்படி மோகனத்திற்குப் பதினைந்து வயதாய்விட்டது. தம்முடைய பெண்ணுக்குச் சீக்கிரமே கலியாணஞ் செய்து பார்க்கவேண்டுமென்று ஆசைகொண்டிருந்த அவளுடைய தாய் தந்தையர்களுக்கு எவ்வளவு துக்கமாயிராது! அவர்கள் எப்பொழுதும் அதே சிந்தையாய் தங்களால் ஆனமட்டும் அந்தப் பெண்ணுக்குப் புத்திசொல்லித் தங்கள் ஜாதியிலேயே ஒருவனைக்கலியாணஞ் செய்துகொள்ள வேண்டினார்கள். ஒன்றும் அவள் காதில் ஏறவில்லை. தான் பிடித்ததே பிடிவாதமாயிருந்தாள்.

அப்படியிருக்க ஒரு நாள் ராத்திரி மோகனம் பாயிலே படுத்துத் தூங்குகையில், நல்ல பாம்பொன்று வந்து அவள் தலையின் கீழ்த் தலையணையாகச் சுருட்டிக் கொண்டிருந்தது. அதின் உடம்பு சில்லென்று மேலே படவே அவள் இதென்ன வென்று திடுக்கிட்டு எழுந்தாள். உடனே அந்த பாம்பும் எழுந்து படத்தை விரித்து ஆடிக்கொண்டு அவள் கழுத்தைச் சுற்றிக் கொண்டு அவளை அவ்விடம் விட்டு நகரவொட்டாமற் செய்தது. பாம்பு தன்னைப் பிடித்துக் கொண்டிருக்கிறதென்று அவளுக்குத் தெரியவே, கைகால்களெல்லாம் குடைவது போலவும் மாரை அடைப்பதுபோலவும் விஷச்செய்கை என்னென்ன உண்டோ அவை யெல்லாம் அவள் புத்தியில் தோன்றின. கைகால்களை அசைக்கக்கூட வில்லை, சுவாசம்விடக் கூடவில்லை; இப்படிச் சற்றே தவித்தாள். இரண்டொரு நிமிஷத்தில் அந்தப் பாம்பு அவள் கழுத்தினின்று மிரங்கி மெதுவாய் ஒருவர் கண்ணுக்கும் தெரியாமல் ஓடிப்போயிற்று. அவள் உடம்பில் கொஞ்சங்கூட காயம்படவில்லை. சிறிது நேரத்தில் அவள் கொண்டிருந்த பயமும் தணிந்தது. பாம்பு வந்த செய்தி அவ்விட்டுக்காரர் எல்லாருக்கும் தெரிந்து அதைத்தேடிப் பார்த்தார்கள். அது அந்த வீட்டில் எங்கும் அகப்படவில்லை! அது என்ன புதுமையோ?

மோகனம் அப்படியே படுத்துக்கொண்டிருந்தாள். பாம்பு வந்து நம்மைப் பிடித்ததே இது என்னவென்கிற சிந்தை மட்டும் அவள் மனதில் புகுந்து கொண்டது. ஆயினும் அவள் பாம்பின் கையில் அகப்பட்டு தப்பினதனால் இது ஏதோ ஒரு நல்ல காலத்திற்குத் தான் குறிப்பென்று அனைவரும் எண்ணினார்கள். இதற்கு முன்னே அவள் இப்படியே இரண்டு தரம் பெருத்த அபாயத்தினின்றும் தப்பிப் பிழைத்தவள். அந்த கிராம தேவதை அவர்கள் செய்த பூஜையினால் அவர்களிடத்தில் பரிபூரணமாய்க் கருணை கூர்ந்திருப்பதனாலேதான் அப்படி யெல்லாம் ஆயின. ஆயினும் பாம்பைக் கண்டதினால் உண்டான திகிலினால் அவ

ள் மனது மட்டும் பதைத்துக்கொண்டேயிருந்தது; பிறகு ராத்திரி அவளுக்கு நித்திரையே வரவில்லை. அப்படி அவள் நித்திரையில்லாமலிருந்தும், கனவுபோல் என்னென்னவோ தோற்றங்கள் அவள் மனதில் தோன்றிக்கொண்டேயிருந்தன. அப்பொழுது தான் ஒரு பள்ளச்சியாகத்தோன்றவில்லை. சிறந்த ஆடையாபரணங்கள் அணிந்த ஒரு மஹாராஜாவினுடைய மனையாட்டியாகவும், ராஜ பரிஜனங்களெல்லாம் சூழ்ந்து நிற்கத் தன் இனத்தாரெல்லாம் கீழே விழுந்து தன்னை வணங்கிக் கொண்டிருப்பதாகவும் இப்படி அதிசயமான கனவு ஒன்று கண்டு உடனே கண்ணை விழித்துப் பார்த்தாள். ஒன்றும் காணப்படவில்லை. சூரியன் உதயமாயிருக்கக்கண்டு அதைக் கைபெடுத்துத் தொழுது எழுந்தாள்.

அந்தப்பள்ளன் வீட்டுக்குக் கொஞ்சதூரம் அப்பால் வள்ளுவச்சி ஒருத்தி இருந்தாள். பற்பல மாயை மந்திரம் தெரிந்தவளென்றும், நடக்கப்போகிற சங்கதிகளை யெல்லாம் நன்றாய்க் கண்டறிந்து சொல்லுகிறவளென்றும் அந்தப் பக்கமெங்கும் அவள்பிரசித்தி பெற்றிருந்தாள். அவளுடைய வல்லமையைப் பற்றிப் பலவிதமாய்ச் சொல்வார்கள். அவளைப்போன்றவர்கள் மனிதர்களுடையகுடல்களைத்தின்பவர்களாம் அவர்கள் தங்கள் பார்வையினாலும் மந்திரத்தினாலும்பிறருடைய குடல்களைத் திருடுவார்கள். பார்வையினாலேயே யாரையும் மயங்கச்செய்து அவர்களிடத்திலிருந்து மாதுளம் விதைபோன்ற ஏதோ ஒரு பொருளைத் திருடி தமது கால் தசையில் ஒளித்துக்கொள்வார்கள். அவர்கள் ஒரு நெல்லை நெருப்பில் போட்டால் அது பெரிய பூசணிக்காயளவு பொரிகிறது. அந்தப் பொரியை அவர்தன் காலுபேர் பகுத்துத் தின்பார்களானால், உடனே அவர்களுடைய மாயையினால் மயக்கப்பட்டவர்கள் இறந்து போவார்கள். யாராவது ஒருவன் அந்தமாயாவியினுடைய கால் தசையை அறுத்து அங்கிருக்கும் தானியத்தை எடுத்து மயக்கப் பட்டவனுக்குக் கொடுத்துத் தின்னச்சொன்னால் உடனே அவன் சாகாமல் பிழைப்பான். ஆயினும் ஒருவரும் அப்படிசெய்ய வொட்டாமல் வெகு எச்சரிக்கை செய்து கொண்டிருப்பார்கள். இவைகளோடு கூட அந்த மாயக்காரர்கள் தூரத்தேசத்துச் செய்திகளை ஒரு நொடியில் அறிந்து சொல்வார்கள், எவ்விதமான ரோயையும் தங்கள் மந்திரசத்தினால் தீர்ப்பார்கள், என்று இப்படி அவர்களுடைய மகிமையைப் பற்றி பலவிதமாய்ச் சொல்வதுண்டு.

இப்படிப் பலவிநோதமான செய்கைகளுள்ள ஒருவள்ளுவச்சியைப்பற்றி மேலேசொன்ன பள்ளன் மகளான மோகனம் வெகுவாய்க் கேள்விப்பட்டிருந்தாள். அந்தப் பெண் அவளை ஒரு நாளாவது கண்டதுமட்டுமில்லை. மனிதர்களுடைய விதிப்பயனை நன்றாய்க் கண்டறிந்து நடக்கப்போகிற செய்கைகளைச் செம்மையாய்ச் சொல்லும் திறமையுடையவளென்று பிரசித்திபெற்றிருந்ததோடுகூட, அந்ததேசத்தில் பஞ்ச முண்டானாலும் கொள்ளைநோய் உண்டானாலும் மற்ற எந்ததீமை உண்டானாலும் எல்லாம் அவளாலேயே செய்யப்படுகின்றன வென்றெண்ணி அனைவரும் பயப்படத்தக்கவளா யிருந்தாள்.

அவளை எப்படியாவது போய் பார்க்கவேண்டுமென்று வெகுநாளாய் ஆவல் கொண்டிருந்த மோகனம் ஒருநாள் அவளிடத்திற்குப் புறப்பட்டுப்போனாள். அந்த ஜோஸியக்காரி ஒரு மலையடிவாரத்தில் வசித்துக் கொண்டிருந்தாள். அவ்விடம் மனிதசஞ்சாரமேயில்லாமல தனிப்புறமாக வெகு ரமணியமா யிருந்தது. மோகனம் அவ்விடத்திற்குப் போக அஞ்சிக்கொண்டே மெதுவாய் அவள் அண்டைபோய்ச் சேர்ந்தாள். அத்தருணத்தில் அந்தவள்ளுவச்சி ஒரு பாறையின்மேல் உட்கார்ந்திருந்தாள். சப்பைமூக்கும் நீரைவிதைபோல் மண்டையில் அழுந்தியகண்ணும், குழக்கட்டைபோன்ற உதடும்,

முறம்போன்ற காதுமாய் அவள் வடிவம் மிகவும் பார்க்கவழுங்காமல் இருந்தது. அவளுடைய வடிவத்தைப்பார்த்தால் சுமார் நூறு நூற்றைம்பது வயதானவள்போல் தோன்றிற்று. மோகனம் கொஞ்சதூரத்திலிருந்து அவளைப் பார்த்தவுடனே தைரியமாய்ச் சரேலென்று அவள் அண்டைபோய், அவள் கையில் காணிக்கையாக ஒரு மோகராவைத்து, தாயே! எனக்கு ஒரு ஜோஸியம் சொல்லவேண்டும்; வருங்காலத்தை யெல்லாம் கண்டறிந்து சொல்ல தங்களுக்கு நன்றாய்த் தெரியுமே. இப்பொழுது இவ்வுலகத்தில் நான் வாழ்கிற வாழ்க்கை எப்படியிருக்கிறதென்றால், மாஞ்செடி யொன்றுமில்லாமல் நடுக்காட்டிலே செங்குத்தான ஒரு குன்றின்மேல் ஏறிக்கொண்டு தவிப்பவளுடைய பிழைப்புபோல் இருக்கிறதென்று சொன்னாள். அதைக்கேட்டு அவள், "குழந்தாய் அப்படியே கண்டறிந்து சொல்லுகிறேன்; இப்படிப்பட்ட சிறந்த விஷயங்களை எல்லாம் சும்மா கண்டறிந்து சொல்லக்கூடுமா? இதற்கெல்லாம் அதிக விலைகொடுத்து ஆகவேண்டுமென, மோகனம் மற்றோர் மோகராவை அவள் மடியில் போட்டாள்.

(இன்னும் வரும்.)

—:(*):—

## Gleanings from Folk-Lore.

### A Nick-Name for Money.

### "ஆட்கொல்லி."

—:(*):—

"ஆட்கொல்லி" என்றால் என்ன? அது பணத்தினுடைய சுட்டுப் பேர்களில் ஒன்று. இதற்கு ஆட்கொல்லி என்னும் பெயர் வருவானேன்? இந்த ஆட்கொல்லியெனப் படும் பணத்தால் அத்தியந்த தோழன் தன்னைக் காட்டிக் கொடுக்கும் பகைவனாயும், ஒற்றுமைவாய்ந்த குடும்பங்கள் சிதறியும், தாயும் மகனும் ஜன்ம வைரிகளாகவும் ஆகிறார்கள். இந்தப் பணம் இன்னும் எல்லாப் பாபங்களையும் செய்யக் காரணமாகி ஆத்மநாசத்தை யுண்டுபண்ணுமாகையால் அதற்கு "ஆட்கொல்லி"யெனும் பெயர் வந்தது அதிசயமில்லை. அதற்கு அப்பெயர் வந்ததற்கு ஒரு சிறுகதையும் சொல்கிறார்கள். ஒரு காட்டு வழியாய் ஒரு தாய் தன் மகனோடு ஒருவூரிலிருந்து மற்றொரு ஊருக்குப் போய்க்கொண்டிருந்தாள். வழியில் ஒரு கிணற்றண்டை ஒரு மூட்டை நிறையப் பணமிருந்தது. இப்பொழுது தாய்க்கும் மகனுக்கும் யார் அதை வைத்துக்கொள்வது என்பதைப் பற்றி ஒரு சங்கை ஆரம்பித்தது. இதில் மகனுக்கு நம் தாயார்தானே, அவளே வைத்துக்கொள்ளட்டும் நாம் பிறகு வாங்கிக்கொள்வோம் என்று தோன்றவில்லை, அவன் தாய்க்கும் நம்முடைய பிள்ளைதானே யார் வைத்துக்கொண்டிருந்தாலென்ன, என்று தோன்றவில்லை. ஆனால் ஒவ்வொருவரும் தானே அதை எடுத்துக்கொள்ளவேண்டுமென்றெண்ணினர். பணவிஷயத்தில் தாய்மகன் என்கிற பந்துத்வம் போய்விட்டது. இருவரும் இப்படி சங்கைசெய்துக்கொண்டிருக்கும்பொழுது தாய்க்கு, நாம் நம்மகனை பக்கத்து கிராமத்திற்குப்போய் அன்னம் எடுத்துக்கொண்டு வரச் சொல்வோம் சாப்பிட்ட பிறகு அவனை கிணற்றிலிருந்து தண்ணீர்மொண்டு தரச் சொல்வோம். அப்படி தண்ணீர் எடுத்துக்கொண்டிருக்கும் பொழுது அவனை கிணற்றில் தள்ளிவிடலாம் பிறகு நாமே அந்தப்பணத்தை எடுத்து கொள்ளலாம். என்று எண்ணி தன் மகனைத் தனக்கு பசிக்கிறதாகவும், அதனால் பக்கத்து கிராமத்திலிருந்து போஜனம் கொண்டு வரும்படிக்கும பிறகு பணத்தை யார் எடுத்துக் கொள்ளலாமென்பதைப்பற்றி யோசிக்கலாமென்றும் சொன்னாள். அப்படியே மகன் போஜனம் எடுத்துக் கொண்டு வரும்பொழுது அவனுக்கு போஜனத்தில் விஷத்தைவைத்து தாயாரைக் கொன்று விட்டால் தான் பணத்தை எடுத்துக்கொள்ளலாமென்று தோன்றிற்று. உடனே அவன் கொஞ்சம் விஷத்தை வாங்கி அன்னத்தில் கலந்து தாயாருக்குப் போட்டான். தாயாரும் தான் நினைத்தபடி அவனை தண்ணீர் மொண்டுதரும்படி சொன்னாள். அவன் பாதி தூரம் தண்ணீர் இழுத்துக்கொண்டிருக்கும்பொழுது தாயார் மகனை கிணற்றில் தள்ளிவிட்டாள். அவளும் அன்னத்தில் விஷம் கலந்திருந்ததனால் சீக்கிரத்தில் இறந்தாள். இப்படியாகக் கடைசியில் பணமானது தாய்க்கும் மகனுக்கும் சண்டை யுண்டாக்கினது மல்லாமல் இருவரும் வீணாய் சாகும்படிச்செய்தது. ஆ! இப்படிப்பட்ட பணத்தை யுடையவர்களேயே பெரிய மனிதன் என்கிறார்கள். இந்தப்பணம் என்ன எல்லாம் செய்கிறது! ஆத்ம சிநேகிதர்களை விரோதிகளாகச் செய்கிறது. தாய்பிள்ளையென்கிற பந்துத்வத்தையெல்லாம் ஒரு நிமிஷத்தில் போக்கடிக்கிறது. உலகத்தில் இந்தப்பணம் செய்யும் கூத்தே பெருங்கூத்தாயிருக்கிறது!

S. S.

—:—